


மாலை 5] சோபகிருது ஆவணி-செப்டம்பர் 1963 [மணி 12

# அப்பர் என்னும் சொற்பொருள் விளக்கம்

### தோற்றுவாய்

சைவ சமய ஆசிரியர்களாகிய நால்வர் பெருமக்களுள், திருநாவுக்கரசர் ஒருவர். 'அலகில் கலைத்துறை தழைப்பவும், அருந்தவத்தோர் நெறி வாழவும் உலகில் வரும் இருள் நீக்கி ஒளி விளங்கு கதிர்போலவும் வந்து, திருநாவுக்கரசர் திருவவதாரம் செய்தார். திருநாவுக்கரசர் ஒரு சிறந்த சமயாசிரியர் மட்டும் அல்லர்; மிகவும் புகழ் பெற்ற ஒரு வரலாற்றுத் தலைவரும் ஆவர்.

### மகேந்திர வர்மன்

திருநாவுக்கரசர் பல்லவர்குலப் பேரரசன் ஆகிய முதலாம் மகேந்திர வர்மன் (கி. பி. 600-638) காலத்தில் வாழ்ந்தவர். மகேந்திர வர்மன் வடமொழியிற் சிறந்த புலமையுடையவன். மத்த விலாசப் பிரகசனம் என்னும் வடமொழி நாடக நூலை இயற்றியவன். இசைக்கலையில் வல்லவன். சிற்பம், ஓவியம், நடனம் முதலிய கலைகளில் பெரிதும் பயிற்சியும் ஈடுபாடும் மிக்கவன். போர்த்திறனிற் சிறந்தவன். பகாப் பிடுகு லளிதாங்குரன் சத்ருமல்லன் சேத்தகாரி அவனிபாஜனன் குணபரன் முதலிய சிறப்புப் பெயர்கள் பெற்றவன். வட இந்தியப் பெருவேந்தன் ஆகிய ஹர்ஷ வர்த்தனன் (606-647) என்பவனைப் போரில் வெற்றி—கொண்ட இரண்டாம் புலிகேசி (கி.பி. 608-642) என்னும் சாளுக்கிய மன்னனைத் தோற்கடித்த பெரு வீரன்.

இத்தகைய புகழோங்கிய பேரரசனின் அவையிலேயே தருமசேனர் என்னும் சிறப்புப் பட்டம் பெற்றுச் சமண் சமயத் தலைவராக முதற்கண் விளங்கியிருந்தார் திருநாவுக்கரசர்! பின்னர் அவர் இறையருளாற் சமண் சமயத்தினின்று நீங்கிச் சைவ சமயம் சார்ந்தார். அதன் விளைவாக மகேந்திர வர்மன், தானும் சமண் சமயம் விடுத்துச் சைவனாக மாறினான். 'இலிங்கத்தை வழிபடும் குணபரன் (மகேந்திர வர்மன்) என்னும் மன்னனாகிய யான், புறச் சமயத்தில் இருந்து திரும்பியதனாற் பெற்ற ஞானப் பேரொளியானது இந்த இலிங்கத்தின் வாயிலாக நெடுங்காலம் இவ்வுலகில் நின்று நிலவுவதாக' என்று அவனுடைய திருச்சிராப் பள்ளிக் கல்வெட்டுக் கூறுகின்றது. மகேந்திர வர்மன் ஆகிய பல்லவப் பேரரசன். திருநாவுக்கரசர் பெருமானை அடைந்து பணிந்து சைவனாக மாறிய வரலாற்றுச் சிறப்புடைய மாபெரும் நிகழ்ச்சி (Historic Incident) யினை,

" புல்லறிவிற் சமணர்க்காப் பொல்லாங் புரிந் [தொழுகும்
பல்லவனும் தன்னுடைய பழவினைப்பா சம்பறிய
அல்லல்ஒழிந் தங்கெய்தி ஆண்டஅர சினைப் [பணிந்து
வல்லமணர் தமைநீத்து மழவிடையோன் தாள் [அடைந்தான்"

"வீடறியாச் சமணர்மொழி பொய்யென்று மெய் [யுணர்ந்து
காடவனும் திருவதிகை நகரின்கண் கண்ணு [தற்குப்
பாடலிபுத் திரத்தில்அமண் பள்ளியொடு [பாழிகளும்
கூடஇடித் துக்கொணர்ந்து குணபரஈச் சரம் [எடுத்தான் "

எனவரும் பெரியபுராணப்பாடல்களால் ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகள் விளக்கியிருத்தல் காண லாம். மகேந்திர வர்மன் என்னும் பல்லவ மன் னன், திருநாவுக்கரசர் பெருமானல் சிவநெறி யாளனுக மாறிய மாபெருஞ் சிறப்பு நிகழ்ச்சி, தமிழ்நாட்டு வரலாற்றிலும் சைவ சமய வரலாற் றிலும், ஒப்புயர்வற்ற புகழ்மிக்க தனிப்பெருஞ் சிறப்பு நிகழ்ச்சியாகும்.

திருநாவுக்கரசரால் மனமாற்றம் பெற்றுச் சைவனுக மாறிய மகேந்திர வர்ம பல்லவன், சீய மங்கலம், பல்லாவரம், வல்லம், தளவா னூர், திருக்கழுக்குன்றம், திருச்சிராப்பள்ளி, திருமயம் என்னும் இடங்களில் மலைகளை வெட் டிக் குடைந்து சிவபிரானுக்குக் கோயில்கள் எடுப்பித்தான்.

பழங்காலத்தில் மண் மரம் செங்கல் சுண் ணும்பு முதலியவற்றினுல்தான் தமிழ் நாட்டுக் கோயில்கள் கட்டப்பெற்று வந்தன. 'செங்கல், சுண்ணும்பு, மரம், உலோகம் என்பன இல்லா மல் மும்மூர்த்திகட்கு விசித்திர சித்தன் அமைத்த கருங்கற் கோயில் இது' எனவரும் மண்டகப் பட்டுக் கல்வெட்டினுல் இவ்வுண்மை இனிது புலப்படும். முதன் முதற் கருங்கற்களி ஞல் கோயில்கள் கட்டத் தொடங்கிய பெருமை, மகேந்திர வர்மனையே சாரும். இங்ஙனம் மகேந்திர வர்மனை மனமாற்றம் அடையும்படி செய்து, அவனைச் சிவநெறியாளனுக ஆக்கி ஆட்கொண்டு, அவன் பற்பல கருங்கற்கோயில் களை எடுப்பிப்பதற்குக் காரணராக விளங்கிய பெருமை, திருநாவுக்கரசர்க்கே உரியதாகும்.

## நரசிம்ம வர்மன்

திருநாவுக்கரசர் எண்பத்தோ ராண்டுகள் இந் நிலவுலகத்தில் வாழ்ந்திருந்தவ ராதலின், அவர் மகேந்திர வர்ம பல்ல மன்னனின் மகனு கிய முதலாம் நரசிம்ம வர்ம பல்லவன் (கி.பி. 630-668) காலத்திலும் வாழ்ந்திருந்த மாட் சிமையுடையவர் என்பதும், ஈண்டு உணர்ந்து இன்புறுதற்கு உரியது. 'மாமல்லன்' என் னும் சிறப்புப் பெயர் கொண்டிருந்த நரசிம்ம வர்மனுல் அமைக்கப் பெற்றதே, இன்று சிற்பக் கலைத் திறனுக்கு உலகப் புகழ் பெற்றுள்ள மாமல்ல புரம் (மகாபலிபுரம்) ஆகும். அறு பான் மும்மை நாயன்மார்களுள் ஒருவரான பரஞ்சோதியார் என்னும் சிறுத்தொண்ட நாய னுர், இம்முதலாம் நரசிம்ம வர்ம பல்லவனின் படைத்தலைவராக விளங்கியிருந்தவர். இச் சிறுத்தொண்ட நாயனுர் தாம், இரண்டாம் புலிகேசி என்னும் சாளுக்கிய மன்னனைப் பம் பாய் மாகாணத்திலுள்ள 'பாதாமி' என்னும் வாதாபிப் போரில் (கி. பி. 642) வெற்றி பெற்ற பெருவீரர் ஆவர்.

"மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து [வாதாவித்
தொன்னகரம் துகளாகத் துளைநெடுங்கை வரை [யுகைத்துப்
பன்மணியும் நிதிக்குவையும் பகட்டினமும் பரித் [தொகையும்
இன்னனஎண் ணிலகவர்ந்தே இகலரசன் முன் [கொணர்ந்தார்"

என இவ்வரலாற்று நிகழ்ச்சியையும் பெரிய புராணத்துட் சேக்கிழார் சுவாமிகள் குறிப்பிட் டருளியிருத்தல் அறிந்தின்புறற் பாலது.

திருநாவுக்கரசர் திருஞான சம்பந்தர் சிறுத் தொண்டர் திருநீலநக்கர் ஆகியவர்கள் திருப் புகலூரில் முருக நாயனுரோடு, அவர் தம் திரு மடத்தில் அடியார்கள் பலருடன் ஒன்று சேர்ந்து

சிலகாலம் தங்கியிருந்து "உடனுறைவின் பயன் பெற்றார்" எனப் பெரியபுராணம் கூறுகின்றது. இவற்றினாலெல்லாம் இவர்கள் சம காலத்தவர்கள் என்னும் உண்மை (Contemporaneity) தெரிவதுடன், திருநாவுக்கரசர் ஒரு சிறந்த புகழமைந்த வரலாற்றுப் பெருஞ் சான்றோர் (Historical personage) என்னும் செய்தியும் தெளியப்படுகின்றது.

## தமிழகத் தலைவர்

திருநாவுக்கரசர் சைவ சமய ஆசிரியர்மட்டுமேயன்றித் தமிழ் நாட்டின் மிகச் சிறந்த தலைவர் (National Leader) எனவும் விளங்கினார். சேக்கிழார் சுவாமிகள் '**தேசம் உய்ய வந்தவர்**' '**தமிழ்மொழித் தலைவர்**' என்றெல்லாம் திருநாவுக்கரசரைச் சிறப்பித்துக் கூறியிருத்தல், இவ்வுண்மையினை இனிது விளக்கும். தமிழ் மொழிக்கும் சிவநெறிக்கும் பல்லாற்றானும் மாறுபட்டு நின்ற பல்லவ மன்னர்களைத் தமிழ்மொழியிலும் சிவநெறியிலும் மிகவும் ஈடுபாடு கொண்டு இன்புறுமாறு சீர்திருத்தி, உய்யக் கொண்டருளிய பெருஞ்சிறப்புக்கு உரியவர் திருநாவுக்கரசரே எனின், அவர்தம் அருமை பெருமைகளை யாவரும் கருதியுணரலாம்.

"திசையனைத்தின் பெருமையெலாம் தென்றி [சையே வென்றேற
மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனிவெல்ல
அசைவில்செழுந் தமிழ்வழக்கே அயல்வழக்கின் [துறைவெல்ல
இசைமுழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் [நிலைபெருக"

ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் நாட்டின் மூலை முடுக்குகள் எங்கணும் சென்று "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பினர்." இசையும் நடனமும் சிற்பமும் ஓவியமும் இலக்கியமும் ஆகிய கலைகள் பலவும், திருநாவுக்கரசராலும் திருஞானசம்பந்தராலும் பெரிதும் மறுமலர்ச்சி (Renaissance) யுற்றுத் தழைத்தோங்கி வளரலாயின. தமிழ் மக்களின் வாழ்வில் இதற்கு முன்பு எப்போதும் ஏற்பட்டிராத நிலையில் புதியதொரு பெருங்கிளர்ச்சியும் இணையற்ற புத்தெழுச்சியும் (Revolution and Resurrection) ஏற்பட்டு நன்மைகள் பல விளைந்தன.

## சிறப்புப் பெயர்

இணைய பல பெருஞ் சிறப்புக்களையுடைய திருநாவுக்கரசருக்கு 'அப்பர்' என்னும் சிறப்புப் பெயர் அவர்தம் அருமை பெருமைகளையுணர்ந்த சான்றோர்களால் தொன்று தொட்டுப் போற்றி வழங்கப் பெற்று வருகின்றது. அவர்க்கு அவர்தம் பெற்றோர்கள் இட்டு வழங்கிய பெயர் மருள் நீக்கியார் என்பது.

"பாவுற்றலர் செந்தமி ழின்சொல்வளப்
பதிகத்தொடை பாடிய பான்மையினால்
நாவுக்கர சென்றுல கேழினும்நின்
நன்னாமம் நயப்புற மன்னுக!"

என்று திருவதிகை வீரட்டானேசுவரர் அருளிச் செய்த காரணத்தால் இவர்க்குத் திருநாவுக்கரசர் என்னும் பெயர் ஏற்பட்டது.

இங்ஙனம் திருநாவுக்கரசருக்கு வழங்கி வரும் பெயர்கள் பலவற்றுள் 'அப்பர்' என்னும் திருப்பெயர் மிகவும் சிறப்புடையதாய், மக்களிடையே அன்பும் மதிப்பும் ஆர்வமும் அமையப் பெருக வழங்கிப்போற்றப் பெற்று வருகின்றது. 'அப்பர்' என்னும் திருப்பெயர், திருநாவுக்கரசருக்குத் திருஞானசம்பந்தரால் வழங்கப் பெற்றதனைப் பெரிய புராணம் பல இடங்களிற் குறிப்பிட்டுக் கூறுகின்றது.

## சீர்காழி

இப்பெயரைத் திருநாவுக்கரசர்க்கு முதன் முதல் வழங்கியவர் திருஞானசம்பந்தரேயாவர். திருநாவுக்கரசர் தில்லையைப் பணிந்து கொண்டு, திருநாரையூர் இறைஞ்சிச் சீர்காழிப் பதியின் மருங்கு சார்ந்தார். சம்பந்தர் அவரை வரவேற்பதற்காக அன்பர்கள் புடைசூழ எழுந்தருளி முன்னே வந்தார். நாவுக்கரசர் தொண்டர் குழாத்திடையே சென்று பழுதில் பெருங் காதலுடன் சம்பந்தரின் திருவடியிற் பணிந்தார். சம்பந்தர் அவரைத் தம் எழுதரிய மலர்க் கையால் எடுத்திறைஞ்சி 'அப்பரே' என்று அழைக்க, நாவுக்கரசர் 'அடியேன்' என்று அருளிச் செய்தார்.

தொழுதணைவுற் றண்டஅரசு அன்புருகத்
தொண்டர் குழாத் திடையே சென்று
பழுதில்பெருங் காதலுடன் அடிபணியப்
பணிந்தவர்தம் கரங்கள் பற்றி

எழுதரிய மலர்க்கையால் எடுத்திறைஞ்சி
விடையின்மேல் வருவார் தம்மை
அழுதழைத்துக் கொண்டவர்தாம் 'அப்பரே'
எனஅவரும் 'அடியேன்' என்றார்.

### திருப்புகலூர்

திருஞான சம்பந்தர் திருப்புகலூரில் தங்கியிருந்தார். திருநாவுக்கரசர் திருவாரூர் சென்று புற்றிடங்கொண்ட பெருமானை வழிப்பட்டுக் கொண்டு, திருப்புகலூர் நோக்கி வருகின்றார்.



அப்பர் சுவாமிகள்

அச்செய்தியறிந்த சம்பந்தர் அவரை எதிர்கொண்டு சென்று வரவேற்கின்றார். அப்போது நாவுக்கரசர் எதிர் சென்று இறைஞ்சச் சம்பந்தரும் எதிர் வணங்கி, 'அப்பரே! தாங்கள் திருவாரூரில் இருந்து வருகின்றீர்களே! அங்கு ஏதேனும் சிறப்பு நிகழ்ச்சிகள்-செய்திகள் இருந்திருப்பின் விவரித்துக் கூறுதல் வேண்டும்' எனக் கூறினார். அந்நிலையில் அப்பர் திருவாரூரில் நிகழ்ந்த திருவாதிரை விழாவின் சிறப்பினை விளக்கி 'முத்து விதானம் மணிப் பொற்கவரி' எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடியருளினார்.

திருநாவுக் கரசர்எதிர் சென்றிறைஞ்சச்
சிரபுரத்துத் தெய்வ வாய்மைப்
பெருஞான சம்பந்தப் பிள்ளையார்
எதிர்வணங்கி 'அப்ப ரே'நீர்
வருநாளில் திருவாரூர் நிகழ்பெருமை
வகுத்துரைப்பீர் என்று கூற
அருநாமத் தஞ்செழுத்தும் பயில்வாய்மை
அவரும்எதிர் அருளிச் செய்தார்.

மெய்த்திரு ஞானசம் பந்தர் வாக்கின்
வேந்தரை நோக்கி விருப்பி னாலே
'அப்பரை' இங்கணை யப்பெ றும்பேர்
அருளுடை யோம்யாம், அந்தண் ஆரூர்
எப்பரி சால்தொழு துய்ந்த தென்று
வினவிட, ஈறில் பெருந்த வத்தோர்
செப்பிய வண்டமிழ் மாலை யாலே
திருவாதி ரைநிகழ் செல்வஞ் சொன்னார்.

### திருமறைக்காடு :

திருவீழிமிழலையினின்று திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும், திருவாஞ்சியம் தலையாலங்காடு பெருவேளூர் சாத்தங்குடி களமர் விளமர் திருவாரூர் திருக்காருயில் திருநெல்லிக்காகைச்சினம் கொள்ளிக்காடு திருக்கோட்டூர் திருவெண்துறை தண்டலைநீள்நெறி திருக்களர் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு திருமறைக்காடு அடைந்தனர். சொல்லரசரும் பிள்ளையாரும் திருமறைக்காட்டில் மறுகின்கட் புகுந்தபோது, 'அர' என்றெடுத்த ஓசை, இருவிசும்பும் திசை எட்டும் நிறைந்து பொங்கியது. இருவரும் கோயிற் கோபுரத்தைத் தாழ்ந்து இறைஞ்சினர். தெய்வமுன்றில் வலங் கொண்டனர். திருவாயிற் பாங்கு வந்தனர். அருமறைகள் திருக்காப்புச் செய்து வைத்த அக்

கதவம் திறக்க அரிதாகிய செய்தி கேட்டருளினர். கேட்டு வியப்பெய்தி நின்ற சம்பந்தர், திருநாவுக்கரசரைப் பார்த்து 'அப்பரே! திருக் கதவம் திறக்கும்படி நீர் பாடியருள வேண்டும்' என்கின்றார். அவரும் அதற்கு இசைந்து **'பண்ணின்நேர் மொழியாள் உமை பங்கரோ'** எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடிக் கதவு திறக்கச் செய்தருள்கின்றார்.

அப்பரே! வேதவனத் தையர் தம்மை
அபிமுகத்துத் திருவாயில் திறந்து புக்கே
எப்பரிசும் நாம்இறைஞ்ச வேண்டும். நீரே
இவ்வாயில் திருக்காப்பு நீங்கு மாறு
மெய்ப்பொருள்வண் தமிழ்பாடி அருளும் என்ன,
விளங்குமொழி வேந்தர்,அது மேற்கொண் 'டென்னே
இப்பரிசு நீர்அருளிச் செய்தீ ராகில்
இதுசெய்வேன்' எனப்பதிகம் எடுத்துப் பாடினர்.

திருமறைக் காட்டில் திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் தங்கியிருக்கும்போது, மங்கையர்க் கரசியாரும் குலச்சிறையாரும் அனுப்பிய அறிவுடை மாந்தர்களின் வேண்டுகோட்கு இணங்கி, ஞானசம்பந்தர் தாம் பாண்டிநாடு செல்ல இருக்கும் செய்தியைத் தெரிவித்துப் புறப்பட முற்படுகின்றார். அந்நிலையில் திருநாவுக்கரசர், சம்பந்தரை நோக்கிப் 'பிள்ளாய்! அந்த அமண்கையர்களின் வஞ்சனைகட்கு அளவேயில்லை. மேலும், நாளும் கோளும்கூடத் தீயனவாக உள்ளன. தாங்கள் அங்குச் செல்லப் புறப்படுதலை யான் உடன்படுவ தொண்ணுது' எனக் கூறினர். ஆனல் சம்பந்தரோ, 'பரசுவது நம் பெருமான் கழல்கள் என்றுற் பழுதணையாது' எனப் பகர்ந்து, **வேயுறு தோளி பங்கன்** என்னும் திருப்பதிகம் எடுத்து விளம்பினர். திருப்பதிகம் கேட்டதற்பின், நாவுக்கரசர் அதனை யுடன்பட்டுத் தாமும் அவரோடு புறப்பட முற்பட்டார். ஆயினும் சம்பந்தர் அவரைக் கரகமலம் குவித்து இறைஞ்சி, 'அப்பரே! தாங்கள் இந்தச் சோழ நாட்டிலேயே எழுந்தருளி இருப்பீராக!' என்று வேண்டிக்கொண்டு தவிர்த்தார். அவர்தம் வேண்டுகோளை மறுக்கமுடியாமல், நாவுக்கரசரும் ஒருவாறு அதற்கு இணங்கி அமைதி கொண்டார்.

சிரபுரத்துப் பிள்ளையார் அருளிச் செய்த
திருப்பதிகம் கேட்டதற்பின் திருந்து நாவுக்
கரசும்அதற் குடன்பாடு செய்து, தாமும்
அவர்க்குமுன்னே எழுந்தருள அமைந்த போது,
புரமெரித்தார் திருமகனர், 'அப்பர்! இந்தப்
புனல்நாட்டில் எழுந்தருளி இருப்பீர்' என்று
கரகமலம் குவித்திறைஞ்சித் தவிர்ப்ப, வாக்கின்
காவலரும் தொழுதரிதாம் கருத்தில் நேர்ந்தார்.

**திருப்பூந்துருத்தி :**

திருஞான சம்பந்தர் பாண்டிநாடு சென்று சமணிருள் தொலைத்துச் சைவஒளி பரப்பி மீண்டு வருகின்றார். பல தலங்களை வணங்கிக் கொண்டு திருப்பூந்துருத்திக்கு அருகாக வருகின்றார். அப்போது திருநாவுக்கரசர் திருப்பூந்துருத்தியில் எழுந்தருளி யிருக்கின்றார். எனவே அச் செய்தியறிந்து மகிழ்ந்த திருநாவுக்கரசர், தொண்டர் குழாத்தின் இடையே ஒருவரும் அறியாதபடி புகுந்து, சம்பந்தரின் சிவிகையினைத் தாங்குபவர்களுடன் தாமும் ஒருவராகத் தாங்கிக்கொண்டு வந்தார். திருப்பூந்துருத்தியை நெருங்கியதும், சம்பந்தர் நாவுக்கரசரைக் காணுமையால், 'அப்பர் தாம் எங்கு உற்ருர்' என வினவினர். அந்நிலையில் அனைவரும் திகைத்து நிற்க, 'யான் மிகவும் தவம் செய்தேன். ஆதலினுல் நும் திருவடிகளை இப்பொழுது தாங்கிவரும் பேறு பெற்றேன். அதனுல் யான் உய்தி பெற்றுவிட்டேன்' என்று மகிழ்ந்து கூறினர். அவ்வார்த்தை கேட்டு அஞ்சினர் சம்பந்தர்! சிவிகையினின்று விரைந்து இழிந்தார். **'தாங்கள் இவ்வாறு செய்தருளியது என்ன? இது முறையோ?'** எனப் பதைப்புற்று வினவி இறைஞ்சினர். அதற்குத் திருநாவுக்கரசர், **'திருஞான சம்பந்தர்க்கு வேறு எவ்வாறு செயத்தகுவது?'** என வினவி எதிர் இறைஞ்சினர்.

திருஞான மாமுனிவர் அரசிருந்த பூந்துருத்திக்கு
அருகாக எழுந்தருளி, 'எங்குற்ருர் அப்பர்'? என
உருகாநின் 'றும்மடியேன் உம்அடிகள் தாங்கி வரும்
பெருவாழ்வு வந்தெய்தப் பெற்றிங்குற் றேன்' என்ருர்.
(நாவுக். 396)

அப்பர்தாம் என்றூற்றூர் இப்பொழுதென் றருள் [செய்யச்
செப்பரிய புகழ்த்திருநா வுக்கரசர் செப்புவார்
ஒப்பரிய தவஞ்செய்தேன் ஆதலினுல் உம் [அடிகள்
இப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன் யான் என்றூர்.
(சம். 935)

இங்ஙனம் திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசரை 'அப்பர்' என அழைத்தமை, ஞான சம்பந்தர் இளம்பிள்ளையாக இருந்தமையினுல் திருநாவுக்கரசரை அன்புடன் 'தந்தை' என்னும் உறவுரிமை பாராட் மகிழ்ந்த காரணம் பற்றி யிருக்கலாம் என்று, பொதுவாக நாம் கருது கின்றூம்.

ஆனுல் 'அப்பர்' என்னும் சொல்லுக்கு மற்றும் பல்வேறு பொருட் குறிப்புக்களும் இருப்பதாகக் கருத இடன் உள்ளது. *'ஒவ்வொரு மொழியிலும் ஒரு சில சொற்கள் மிகவும் பொருள் நிறைந்து சிறந்து விளங்குவது உண்டு. அச்சொற்களுள் ஒவ்வொன்றைப் பற்றியும் ஒவ்வொரு தனிப் புத்தகமே கூட எழுதலாம். அத்தகைய விரிவான பொருள் நிறைவை அச்சொற்கள் பெற்றிருக்கின்றன' என அறிஞர்கள் குறிப்பிடுவர். அம் முறையில் 'அப்பர்' என்னும் சொல்லும் பல பொருட் குறிப்புகளின் நிறைவை உள்ளடக்கிக் கொண்டிருக்கின்றது.

## திவ்வியப் பிரபந்தம் :

'அப்பர்' என்னும் சொல்லின் பொருட்டிறங்கள் பற்றி அறிந்து கொள்ளுவதற்குத் திருமுறைகளிலோ, அன்றி அவற்றின் சார்புடைய பிற நூல்களிலோ குறிப்புக்கள் ஏதும் காணப்பட வில்லை. வைணவ சமயத்தில் 'மொழிக்கு மொழி தித்திப்பாகச்' சுவைபெருக வரையப் பட்டுள்ள நாலாயிரத் திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்கள் போல்வன, சைவத் திருமுறைகளுக்கும் பண்டைச் சான்றூேர் பெருமக்களால் இயற்றப் பெற்றிருந்தால், இன்றூேன்ன செய்திகள் அவற்றிற் செம்மையுற விளக்கப் பெற்றிருக்கும். அப்பேறு நமக்கு வாய்க்காமற் போயிற்றே எனக்கவன்று, நாம் வருந்த வேண்டுவதாகவே யுள்ளது. என் செய்வது? எனினும், நம் உள்ளத்திற்கு ஓரளவேனும் ஆறுதல் அளிக்கும் வகையில், 'அப்பர்' என்னும் சொற்பொருளின் விளக்கம் இணையதென உணர்ந்துகொள்ள நமக்கு 'நாலாயிரத் திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்கள்' பெரிதும் துணை புரிகின்றன. அவற்றைக் கொண்டு 'அப்பர்' என்னும் சொல்லின் பொருட்டிறம் இதுவென நாம் உணர்ந்து கொண்டு மகிழும் பேறு பெறுகின்றூம்.

## பெரியவர் :

'அப்பர்' என்னும் சொல்லுக்குத் 'தந்தை' என்பது மட்டுமே பொருள் அன்று. அதற்குப் 'பெரியவர்' எனவும் ஒரு பொருளுண்டு.

முதுகு பற்றிக் கைத்தலத்தால்
முன்றெரு கோல் ஊன்றி
விதிர்வி திர்த்துக் கண்சுழன்று
மேற்கிளை கொண்டிருமி
இதுஎன்? அப்பர் மூத்தவாறு!
என்றிளையவர் ஏசாமுன்
மதுவுண் வண்டு பண்கள்
பாடும் வதரி வணங்குதுமே

எனத் திருமங்கையாழ்வார் பாடியருளிய பெரிய திருமொழிப் பாசுரத்தில் வரும் 'அப்பர்' என்னும் சொல்லுக்குப் 'பெரியவர்' எனப் பொருள் கூறப்பட்டுள்ளது. திருநாவுக்கரசர் 81 ஆண்டுகள் வாழ்ந்த 'விருத்தர்' ஆதலின், அவரைப் 'பெரியவர்' என்பது பொருத்தமேயாகும். ஆயினும் அவர் வயதினுல் மட்டுமே பெரியவர் அல்லர். 'வயோ விருத்தம்', 'குண விருத்தம்', ஞான விருத்தம்,' என்னும் மூவகை விருத்தமும் உடைய பெரியவர் என்று கொள்ளுதல் தகும். வயதினுலும் குணத்தினுலும் ஞானத்தினுலும் இணைய பிற சான்றுண்மை நலங்களினுலு மெல்

---

* "Some words carry so much, that a whole book might be written on their meaning; and indeed many thinkers have toiled long on the definition of small words such as **good, beautiful, sublime, romantic.** It was well said by Cardinal Newman that the word **God** is itself a theology, and there are hundreds of other words which are in themselves embryonic systems of thought.

— **Bernard Groom, M.A.,**
*A short History of English words, p. 126.*

லாமும் பெரியவராகத் திகழ்ந்திருந்தமை பற்றியே, சம்பந்தர் அவரைப் 'பெரியவர்' என்னும் கருத்தில் 'அப்பர்' என்றூர் ஆதல் வேண்டும்.

## வழிபடத் தக்கவர் :

இனி, 'அப்பர்' என்னும் சொல்லுக்கு வேறெரு சிறப்புப் பொருளும் உண்டு. அதாவது 'பூஜ்யர்' என்பது. அது 'பூஜிக்கத் தக்கவர்' 'வழிபடுதற் குரியவர்' எனப் பொருள்தரும்.

பாரேறு பெரும்பாரம் தீரப் பண்டு
பாரதத் தூதியங்கிப் பார்த்தன் செல்வத்
தேரேறு சாரதியாய் எதிர்ந்தார் சேனை
செருக்களத்துத் திறலழியச் செற்றுன்...

எனவரும் திருக்கோவலூர்த் திருப்பாசுரத்தின் வியாக்கியானப் பகுதியில், 'அவனை அப்பராகச் சேமம் சாத்தி வைத்து' என்னும் தொடர் வருதல், மேற்குறித்த 'பூஜ்யர்' என்னும் பொருட்குறிப்பை யுடையதாதல் காணலாம். இவ்வாற்ருல், திருநாவுக்கரசரின் அருமை பெருமைகளை யுணர்ந்த திருஞான சம்பந்தப் பெருமான், அவரை 'வழிபடத் தக்கவர்' என்னும் பொருளில் 'அப்பர்' என வழங்கிச் சிறப்பித்திருத்தல் கூடும் என்று, நாம் கொள்ளுதல் பொருந்தும். திருநாவுக்கரசர் நம்மால் பெரிதும் வழிபடத் தக்க மாட்சிமையுடையவர் என்று சொல்லுதலும் வேண்டுமோ?

## உபகாரகர் :

இனி, இவைகளே யன்றி 'உபகாரகன்' என்ற ஒரு பொருளும் 'அப்பர்' என்னும் சொல்லுக்கு உண்டு எனத் தெரிகின்றது.

எப்பாவம் பலவும் இவையே
செய்து இளைத் தொழிந்தேன்
துப்பாநின் அடியே தொடர்ந்து
ஏத்தவும் கிற்கின்றி லேன்
செப்பார் திண்வரை சூழ்
திருவேங்கட மாமலைஎன்
அப்பா வந்தடைந்தேன்
அடியேனை ஆட்கொண்டருளே

எனவரும் திருவேங்கடமலைத் திருப்பாசுரத்தில் வரும் 'அப்பா' என்னும் சொல்லுக்குத் 'தந்தையே' என்று பொருள் கூருமல் 'உபகாரகனே' என்று பொருள் குறிக்கப் பட்டிருக்கின்றது. திருநாவுக்கரசர் தம் இளமையிலேயே 'தேசநெறி நிலையாமை கண்டு அறங்கள் செய்தவர். ஆசில் அறச்சாலைகளும் தண்ணீர்ப் பந்தரும் அமைத்தவர்'.

காவளர்த்தும் குளந்தொட்டும் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்
நாவலர்க்கு வளம்பெருக நல்கியும்நா னிலத்துள்ளோர்
யாவருக்கும் தவிராத ஈகைவினைத் துறைநின்றூர்

எனச் சேக்கிழார் சுவாமிகள், திருநாவுக்கரசரின் பொதுநல உபகாரத் தொண்டுகளைப் புகழ்ந்து போற்றிக் கூறியிருத்தலைக் காண்கிறோம். இன்னோரன்னவைகளைக் கருதியும் சம்பந்தர், நாவுக்கரசரை 'உபகாரம் செய்பவர்' என்னும் பொருளில் 'அப்பர்' எனப் போற்றிப் புகழ்ந்து கூறியிருத்தல் கூடும்.

## சர்வ காரண பூதர் :

இனி, இவற்றினெல்லாம் வேருக 'அப்பர்' என்னும் சொல்லுக்கு மற்றொரு சிறப்புப் பொருளும் இருப்பதாகத் தெரிகின்றது.

சிந்தப் புடைத்துச் செங்குருதி
கொண்டு பூதங்கள்
அந்திப் பலிகொடுத்து ஆவத்தனம்
செய் அப்பன் மலை
இந்திர கோபங்கள் எம்பெரு
மான்கனி வாய்ஒப்பான்
சிந்தும் புறவில் தென்திரு
மாலிருஞ் சோலையே

எனவரும் பெரியாழ்வார் திருமொழிப் பாசுரத்தில், 'ஆவத்தனம் செய் அப்பன் மலை' என்னும் தொடருக்கு, 'ஸர்வ காரண பூதன் வர்த்திருக்கும் மலை' எனப் பொருள் விவரிக்கப் பட்டுள்ளது. அதனுல் தமிழ்நாட்டின் வளர்ச்சி - பல

துறைப்பெருமை-சிறப்புகள் ஆகிய அனைத்திற்கும், 'சர்வகாரண பூதர்' எனும்படி விளங்குபவர் திருநாவுக்கரசர் ஆதலின், அவர் அப்பர் எனப் புகழ்ந்துரைக்கப் பெற்றார் எனக் கொள்ளுதலும் மிகப் பொருத்தமாகும்.

## பப்ப அப்பர் :

திருநாவுக்கரசர் பல்லவர் காலத்தில் வாழ்ந்திருந்தவர். திருஞான சம்பந்தரும் அக்காலத்தில் வதிந்தவரே. பல்லவர்கள் காலத்தில் பிராகிருத மொழி ஓரளவு ஆட்சி பெற்றிருந்தது. அப் பிராகிருத மொழியில் பப்ப என்னும் சொல் சான்றோர்களைக் குறிக்கும் பெரும் மரியாதைச் சொல்லாக விளங்கியது. பல்லவர் காலத்துக் கல்வெட்டுக்களில் 'பப்ப' என்னும் சொல் சான்றோர்களைக் குறிக்கும் ஒரு சிறந்த மரியாதைச் சொல்லாக வழங்கி வந்தமை அறியப்படுகின்றது.

'மகாராஜா பப்ப ஸ்வாமி'
'பப்ப பட்டாரக மஹாராஜா'
'தைவதம் ஆகாநின்ற பப்ப பட்டாரகர்'
'பப்ப பட்டாரக பாத பக்தன்'

என்பன போன்ற தொடர்கள், பல்லவர் காலத்துக் கல்வெட்டுக்களிற் காணப்படுகின்றது. 'பப்ப' என்னும் பிராகிருதச் சொல்லும், 'அப்பர்' என்னும் தமிழ்ச் சொல்லும் ஒன்றினொன்று தொடர்புடையனவாய், ஒரே பொருள் குறிப்பனவாகத் தோன்றுகின்றன. 'பப்ப' என்பதற்கு 'அப்பன்' என்பதே பொருள். 'Papa' என்னும் ஆங்கிலச் சொல்லும் Father என்னும் பொருளேயுடைய தாதல் காண்க. 'பப்ப அப்பர்' என்னும் திருமங்கையாழ்வார் பெரிய திருமொழிப் பாசுரத் தொடர், (969/3) இக் கருத்தினை வலியுறுத்தும். இஃது 'அடவி காடே' எனத் தேவாரத்திலும், 'அதுதான் ஞான திரோதகமாய் மறைத்துக் கொடு நிற்றலான்' எனச் சிவஞானபோதத்திலும், 'ஸ்லேட் பலகை' 'கேட் வாசல்' எனப் பேச்சு வழக்கிலும் (Tautology, Redundancy) வருவனவற்றைப் போல்வதாகும்.

## ஞானப் பெருங்குரவர் :

பண்டைக் காலத்தில் 'பப்ப' என்னும் சொல், அரசராக இருந்து துறவு நெறிமேற் கொண்டவர்களையும், அரசர்களுக்கு ஞான குருவாக (Spiritual preceptors) விளங்கிய பெருமக்களையும் குறிக்கும் சிறப்புரிமை யுடையதாக வழங்கி வந்தமை புலனாகின்றது.

திருநாவுக்கரசர் மகேந்திரவர்மன் நரசிம்மவர்மன் முதலிய பல்லவப் பேரரசர்களின் ஞானப் பெருங் குரவராகத் திகழ்ந்திருந்தமை தெளிவு. அச் சிறப்புடைமை கருதியும், திருநாவுக்கரசரைச் சம்பந்தர் 'அப்பர்' எனப் போற்றியருளினர் போலும்!

## தமிழ்நாட்டுத் தந்தை :

இஞ்ஞான்று நாம் அனைவரும் காந்தியடிகளை நாட்டின் தந்தை—தேசபிதா—பாபுஜி—(The Father of the Nation) என்றெல்லாம் பாராட்டி வருகின்றோம். இத்தகைய அரும் பெரும் பொருட் குறிப்பிலேயே, சம்பந்தர் நாவுக்கரசரைப் பல இடங்களில் 'அப்பர்' எனச் சிறப்பித் துரைத்துக் குறிப்பிட்டருளினார் என்றும் கொள்ளலாம். தமிழ்நாட்டுக்குப் பல்லாற்றானும் தந்தை எனப் போற்றத் தக்கவர் அப்பர் எனலாம்.

சூலைநோய் தலைக்கீ டாகத்
தொல்சிவ நெறிக்கு மீண்டு
மூலையும் முடுக்கர் தோறும்
முத்தமிழ் முழங்கும் வணங்கும்
சாலநற் புரட்சி செய்த
'தமிழ்நாட்டுத் தந்தை' யாகும்
சீலமார் அப்பர் பெம்மான்
சிறப்பெலாம் போற்றி யுய்வாம்



# வழிபாட்டிற்கு வேண்டுவன

திரு. ம. வெ. மு. நாகராஜக் குருக்கள், சிறுதையூர், லால்குடி.

## திருக்கோயில் வழிபாடு

சிவபெருமான் இன்ப வடிவினர். கருணையே அவரது குணம். பேரறிவே அவரது தன்மை. உயிர்களின் துயரங்களை நீக்கிப் பேரின்பத்தைத் தருவதே அவரது செயல். ஞான விளக்கம் பெற்று அன்பையும் அறத்தையும் மேற்கொண்ட நன்மக்கள் சிவபெருமானை வழிபாடு செய்ய விரும்புவது இயல்பு. அறவழி நின்று அன்போடு செய்யும் வழிபாடுகளைச் சிவபெருமான் ஏற்று அருள்புரியும் இடங்கள் திருக்கோயில்களேயாகும். விறகில் மறைந்துள்ள நெருப்பு கடையும்போது வெளிப்படுதல் போலவும், பசுவின்பால் அதன் முலைக் காம்புகளினின்றும் விம்மி ஒழுகுவது போலவும் எங்கும் நிறைந்த இறைவன் திருக்கோயில்களின் உள்ளே இருக்கும் தெய்வ வடிவங்களின் மூலம் மந்திரங்களைக் கூறி நினைக்கும் அன்பர்களுக்கு வெளிப்பட்டு அருளுகின்றார். இக் கருத்தைச் சிவஞானசித்தியார் என்ற நூல் கூறுகின்றது.

“ திருக்கோயில் உள்ளிருக்கும்
திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச்
சிவனுறைவ னங்கே
உருக்கோலி மந்திரத்தாலென
நினையும வர்க்கும்
உளனெங்குமிலன் இங்கு
முளன் என்பார்க்கும்
விருப்பாய வடிவாகியிந்
தனத்தின் எரிபோல்
மந்திரத்தில் வந்துதித்து
மிகுஞ்சுரபிக் கெங்கும்
உருக்கான வொண்ணுதபால்
முலைப்பால் விம்மி
யொழுகுவதுபோல் வெளிப்பட்டு
அருளுவனன் பர்க்கே.”

—சிவஞானசித்தியார்.

“காரணமில்லாமல் காரியம் நிகழாது. ஒவ்வொரு காரியத்திற்கும் ஒரு மூலகாரணம் உண்டு. குடம் என்பது ஓர் காரியம். இந்தச் செயலுக்குக் காரணம் (உரியவன்) குயவன். நாம் காண்கின்ற குடம் மண்ணிலிருந்து குயவனால் ஆக்கப்படுகிறது. மண்ணோடு மண்ணாகக் குடம் அழிந்து போவதையும் நாம் காண்கின்றோம். எவை கண்களால் காணப்படும் பொருளோ அவைகட்கு அழிவு உண்டு. நம்முடைய அங்க அவயவங்களும் சிவசக்தியின் காரியங்கள். ஆத்மா அல்லது உயிர் காரணம். உயிர்களுக்காக மாயையிலிருந்து அங்க அவயவங்களையும் உலகத்தையும் சிவபெருமான் தன் அபின்னமான சக்தியால் படைத்தருளினன். இந்த உலகத்தைச் சக்திமயமாக அறியவேண்டும். சக்தியைச் செலுத்துபவர் சிவபெருமான் என்பது காரணாகமம் காட்டும் உண்மையாகும்.

“ ஜகத : சக்திமயம் வித்யாத் சக்திம்
ப்ரேரயிதாசிவ : |
ஜகத : காரணக்யாணு : ஸகார்யஇதி
கத்யதே |
கார்யாவயவ ரூபேணத்ருஸ்யே நாபிகடா
திவத் |
யத்த்ருஸ்யம் தத்விநாசம் ஸ்யாத்
மாயோபாதான காரணம். |

—காரணாகப்பிரமாணம்.

இந்த உலகம் தோன்றுவதற்கு உபாதான காரணம் (முதற் காரணம்) மாயையே ஆகும். ஆத்மஞானம் வெளிப்படுவதற்காகவே உடலும் அவயவங்களும் நமக்கு ஈஸ்வரனல் தரப் பட்டுள்ளன. குயவன் மண்ணிலிருந்து குடம் பானை, சட்டி முதலிய மண் பாண்டங்களைச் செய்து நமக்கு உதவுவதுபோல் அன்பு வடிவ மான சிவபெருமான் உயிர்களுக்கேற்ற உடல் களையும், சித்தம் - புத்தி - அகங்காரம் - மனம் என்ற நான்கு அந்தக் காரணங்களையும், புவன போகங்களையும் படைத்தார் என்பது சைவ சித்தாந்த நூல்களின் ஆதாரமான பொருளாகும். உயிர்களை இறைவன் படைக்க வில்லை. பேரறிவுடைய கடவுள் - சிற்றறிவுடைய உயிர் - அறிவற்ற பாசம், ஆகிய இம்மூன்றும் எப்போதும் உள்ளவை. அழிவும் தோற்றமும் இல்லாமையால் இம்மூன்றும் அனுதி. திரு மூலரும் இதைச் சொல்லுகின்ருர்.

"அறிவறிவென்ற அறிவுமனுதி
அறிவுக்கறிவாம் பதியும்அனுதி
அறிவினைக்கட்டிய பாசம்அனுதி
அறிவுபதியிற் பிறப்பறுந்தானே."

—திருமந்திரம்.

தனு (சரீரம்) கரண (மனம்) புவன (உலகம்) போகங்களையே இறைவன் படைத்து அறி வுள்ள உயிரை அவற்றுடன் இணைத்துள்ளார். தத்துவங்களோடு உயிரைக் கூட்டி வைப்பதே "ஈஸ்வர சிருஷ்டி" யாகும். இயல்பாகவே உயிர்களுக்கு அறிவு, இச்சை, செயலுண்டு என்பது சைவ சித்தாந்த நூற்றுணிபு. சிவபெரு மான் படைத்த உடம்பின் வழியே உயிர்களின் அறிவு இச்சை செயல்கள் வெளிப்பட்டு உல கெங்கும் பரவுகின்றன. பாசத்தின் ஒரு பகுதி யான பழவினை (கர்மவினை)யின் பயனுக உயிர் பற்பல பிறவிகளிற் பிறந்து முடிவில் "மானுடப் பிறவி பெற்று இறைவன் அருளிய ஆகமங் களினின்றும் பதி (கடவுள்) பசு (உயிர்) பாசம் (உலகம்) ஆகிய முப்பொருள்களின் இயல்பு களை உணர்ந்து சரியை - கிரியை - யோகம் - ஞானம் என்னும் நால்வகை நெறியிற் சென்று சிவனேடு இரண்டறக் கலக்கின்றன. அறிவு விளக்கம் பெற்ற உயிர்ப் பிறவிகள் தாம் பெற்ற உடல் உள்ளத்தின் வழியே, தம் அறிவு - இச்சை - செயல்களை உலக முதல்வனுன இறை வன்பால் நன்றியுணர்வுடன் செலுத்தித் தொடர்பு கொள்வதே "வழிபாடு" என்ப தாகும்.

## நமக்கு வேண்டுவன

நன் மக்கள் போகம்—மோக்ஷம் என்ற இரண்டினையும் வேண்டித் திருக்கோயிலிற் சென்று சிவபெருமானை வழிபடுவார்கள். "வேண்டுவார்க்கு வேண்டுவதே ஈவான் கண்டாய்!" என்ருர் திருநாவுக்கரசு சுவாமி கள். உலக வாழ்வில் போகமும், பிறப்பென்னும் பேதைமை நீங்க மோக்ஷமும் நமக்கு வேண்டு வன. போகம் என்ருல் விரும்புவது. மோக்ஷம் என்ருல் விடுவது. "மாடும் சுற்றமும் மற்றுள போகமும் மங்கையர் தம்மோடும் கூடியங்குள குணங்களால் ஏறுண்டு திரி" வதையே உலக வாழ்க்கையில் பற்றுள்ளவர்கள் விரும்புவார்கள். செல்வம்—சுற்றத்தினர் தொடர்பு—மங்கையர் உறவு—இது போன்ற போகங்களை அனுபவிப் பதற்குத் தடையாகப் பலவித துன்பங்களும், உலகில் இயல்பாக உள்ளன. உலக வாழ்க்கை யில் உயிர்ப் பிறவிகள் படும் துயரங்களை எல்லாம் மூவகையாக ஆகமம் கூறுகின்றது.

"ஸம்பந்தாஸ்தஸ்ய ஜீவஸ்ய துக்கத்ரயமி
ஹோச்யதே
ஆத்யாத்ம மதிபூதஞ்ச அதிதைவிகமேவச |"

—சுப்ரபேதாகமம்.

"உலக சம்பந்தமுள்ள ஜீவனுக்கு (உயிருக்கு) மூன்று துன்பங்கள் இங்கு கூறப்படுகின்றன. 1. ஆதி யாத்மிகம், 2. ஆதி பௌதிகம், 3. ஆதிதைவிகம் என்பனவாம்" என்று சுப்ரபேதம் என்ற சிவாகமத்தில் கூறப்படு கிறது. இத் துன்பங்கள் பற்றிய விரிவை இவ் வாகமத்திலிருந்தே தமிழில் அறிந்து கொள்வோம்.

'ஆத்யாத்மிகம் என்பது சரீரம்—மானஸம் என்று இருவகைப்படும். குஷ்டநோய்—காச நோய், அதிசாரம், ஜ்வரம் இவை போன்ற இன்னும் பற்பல நோய்களினுலும், மக்கள்— விலங்குகள், பிசாசு, பறவைகள், திருடர், வஞ்சகர் இவர்களினுலும் மக்கள் படும் இன்னல்களெல்லாம் "சரீரம்" என ஆகமம் அருளுகிறது. மானஸம் என்பது சோகம் (மனக்கவலை) அசூயை (பொருமை) அவமானம் நிறைவேருத ஆசைகள் இவைகளாகும். இத்

துன்பங்களையே "ஆத்யாத்மிகம்" என்ற ஒரே சொல்லால் குறிக்கப்படுகிறது.

அடுத்தது 'ஆதிபௌதிகம்' என்பது. குளிர், வெப்பம், காற்று, மழை, இடி, மின்னல் புயல் அகியவற்றாலேற்படும் துன்பங்கள் பஞ்ச பூதங்களினின்றும் தோன்றுவன. ஆதலால் இக் கஷ்டங்களை 'ஆதிபௌதிகம்' என்று கூறப் படுகிறது. மூன்றாவதாக ஆதிதைவீகம் என்ற சொல்லாற் குறிப்பிடும் துயரங்கள் எவை என்று காண்போம். மரணம், நரக வேதனை, நரை - திரை (தோல் நரம்புகளின் தளர்ச்சி) இவைகள்தாம் "தைவீகம்" என்பதாகும்.

இதுவரை குறிப்பிட்ட துன்பங்களைப் போக்குவதற்காகவும், உலக போகங்களை அநுபவித்து இன்பம் நுகர்வதற்காகவும். மக்கள் தம் அறிவு, இச்சை, செயல்களை எப்போதும் பயன்படுத்தி வருகின்றனர். ஆகம நூல்கள் "உலகம் உள்ள அளவும் இத்துன்பங் கள் முழுதும் நீங்கிவிடாது என்றும், அஷ்ட மூர்த்தியாகிய சிவபெருமான் இவ்வுலகெங்கும் வியாபித்து இருக்கிறாரென்றும், இவ்வுலகமே சிவபெருமானின் சரீரமாகக் கற்பிக்கப்பட்டுத் திருக்கோயில்களாக அமைக்கப்பட்டுள்ளன என்றும், இத் திருக்கோயில்களுக்குச் சென்று உள்ளன்போடு வழிபட்டால் இத் துன்பங்கள் குறைவதோடு, எல்லாத் துயரங்களையும் தாங்கும் மன வலிவும், உடல் வலிவும் மக்களுக்குக் ஏற்படும் என்றெல்லாம் கூறு கின்றன, போகத்திற்காகவும் ஆலய வழிபாடு வேண்டும் என்று அறிந்தோம். இனி மோக்ஷம் பற்றி அறிவோம்.

"நமோக்ஷம் யாந்திபுருஷா: ஸ்வஸாமர்த்யாத் கதாசன |
முக்த்வாப்ரஸாதம் தேவஸ்ய சிவஸ்யா சிவ ஹாரிண: |

"புருஷர்கள் ஒருபோதும் தம் சாமர்த்தியத் தினால் மோக்ஷம் அடைவதில்லை. (அசிவத்தை) துன்பங்களைப் போக்குகின்ற தேவனாகிய சிவ பெருமானுடைய அநுக்கிரஹத்தை விட்டு மோக்ஷம் அடைய முடியாது." சிவனரு ளாலேயே மோக்ஷம் பெற முடியும் என்று ஆகமம் கூறுகின்றது. சிவபெருமானுடைய திருவருளைப் பெற்று மோக்ஷம் (வீடுபேறு) பெறத் திருக்கோயில் வழிபாடு வேண்டுவதாகும்.

போகம் உடலின்பத்தையும், மோக்ஷம் உயிரின் பத்தையும் தருவன. இவை இரண்டுமே நமக்கு வேண்டுவன.

## வழிபாட்டு நூல்கள்

போகத்தை அடிப்படையாகக் கொண்ட வழிபாடுகளை வேதங்கள் விரித்துரைக்கின்றன. அறம், பொருள், இன்பம், வீடு என்ற புருஷார்த்தங்கள் நான்கில், தர்ம - அர்த்த - காமங்களை வேதம் விரித்துரைப்பது போன்று மோக்ஷ நெறியை விவரிக்கவில்லை. ஆகமங் கள், பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள் இலக்கணங்களை மக்களுக்கு விளங்கும்படி விரித்துரைத்து சிவனடியைச் சேர்வதே முக்தி யென்று விளக்கம் கூறி அதற்குரிய சாதனங் களான சரியை, கிரியை, யோகம், ஞானம், என்ற வழியிற் சிவ வழிபாட்டு முறைகளை விரித்துரைக்கின்றன. ஆகமங்கள் ஆலய வழிபாட்டின்மூலம் போகம்—மோக்ஷம் என்ற இரண்டினையும் பெறலாம் என்று கூறுகின்றது. வேத மொழிகளில், ஆலய அமைப்புகளோ, ஈஸ்வர வடிவங்களோ, ஆலய வழிபாடுகளோ ஆகிய இவை எதுவும் கூறப்படவில்லை. வேதங்கள் அற ஒழுக்கங்களையும், ஆகமங்கள் அன்பு நெறியையும் விதந்து கூறுகின்றன. மக்களிடையே அறவொழுக்கம் நிலைபெற வேதங்களையும், அன்புநெறி தழைத்தோங்க ஆகமங்களையும் சிவபெருமான் அருளியுள்ளார். நம் உடலுக்கு நல்லொழுக்கமும் உயிருக்கு அன்பும் வேண்டுவதாகும். ஒழுக்கத்தால் உடல் நலமும் அன்பால் உயிர் நலமும் உண்டா கின்றன. இதையே தெய்வச் சேக்கிழாரடிகள்,

"உலகியல் வேதநூல் ஒழுக்கமென்பதும்
இலகுமெய்ந்நெறி சிவ நெறியதென்பதும்
கலதிவாய் அமணர் காண்கிலார்களாயினும்
பலர்புகழ் தென்னவன் அறியும் பான்மையால்"

என்ற பாடலில் எடுத்துக்காட்டியுள்ளார்கள். உலகம் போற்றும் பகவத்கீதையில் "வேதங் கள் போகத்தைப் பற்றிய விஷயங்களைக் கொண்டது" என்று கண்ணன் அர்ஜுன னுக்குக் கூறுகின்றார்.

"யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்தி விபச்சிதா: |
வேதவாதரதா: பார்த்த நான்யஸ்தீதி வாதின: |

காமாத்மாநஸ் ஸ்வர்கபரா: ஜன்மகர்ம
பலப்ரதாம் |
க்ரியாவிசேஷபஹுலாம் போகைஸ்வர்யகதிம்
ப்ரதி |

போகைஸ்வர்ய ப்ரஸ்க்தானும் தயாபஹ்
ருதசேதஸாம் |
வ்யவஸாயாத்மிகாபுத்தி: ஸமாதௌநவிதீ
யதே |

—பகவத்கீதை சுலோகம் 42 - 43 - 44

" எண்ணில் ஆகமம் இயம்பிய
இறைவர்தாம் விரும்பும்
உண்மையாவது பூசனை
எனவுரைத் தருள
அண்ணலார்தமை அர்ச்சனை
புரிய ஆதரித்தாள்
பெண்ணின் நல்லவளாயின
பெருந்தவக் கொழுந்து."

—பெரியபுராணம்.

இதன் கருத்து :— "அர்ஜுனா! வேத மொழியில் விருப்பமுள்ளவர்கள் சுவர்க்கத்திற்கு அன்னியமாக வேறு ஒன்றும் இல்லை என்று வாதிப்பார்கள். இவர்கள் காமம் நிறைந்தவர்கள். சுவர்க்கமே முடிவான பேறு என்பவர்கள். இத்தகைய அவிவேகிகளுடைய புஷ்பாலங்காரமான வார்த்தையைக் கேட்டு உள்ளத்தைப் பறிகொடுத்தவர்களுக்கும், போக ஐஸ்வர்யத்தில் பற்றுடையவர்களுக்கும் உறுதியான புத்தி உள்ளத்தில் ஏற்படுவதில்லை. வேத மொழியில் விருப்பமுடையவர்களுடைய வார்த்தை போக ஐஸ்வர்யங்களைக் குறித்ததாகவும், பலவித விசேஷ கிரியைகளைக் (காமியகர்மங்களை) காட்டுவதாயும், கர்ம பலன்களாகிய புதிய பிறவிகளை உண்டுபண்ணுவனவாயும் இருக்கும்" என்று பார்த்தனுக்கு கண்ணன் காட்டிய வழியன்றோ! மஹாத்மா காந்தி அடிகள் போற்றிய பகவத்கீதையில் 45 வது சுலோகத்திலும் அர்ஜுனா! வேதங்கள் முக்குணமயமானது. நீ முக்குணங்களைக் கடந்தவனாகவும், அறம் பாவமென்ற கட்டுகளினின்றும் விடுபட்டவனாகவும், எப்போதும் பரிசுத்தமுள்ளவனாக, யோக க்ஷேமங்கள் அற்றவனாகவும், ஆத்மவானாகவும் விளங்குவாயாக!" என்று கூறப்பட்டிருப்பதிலிருந்தும் வேத நெறி உலகியல் ஒழுக்கங்களை உணர்த்துவன என்பதை நன்கு உணரலாம். அருமறைகளை அருளிய இறைவன் ஆகமங்களையும் அருளிச் செய்வானேன்? சேக்கிழார் பெருமான் "இறைவன் அம்பிகையிடம் உரைத்தருளியதாக ஆகமத்தின் பயனை" நயம்பட உரைத்து விடுகிறார். திருக்கயிலையில் உலக மாதாவாகிய அம்பிகை சிவபெருமானிடம் ஆகமத்திறனெலாம் உள்ளவாறு கேட்டருளினாள்.

எண்ணில்லாத ஆகமங்களை அருளிய இறைவர் தாம் விரும்பும் உண்மையாவது பூசனை (வழிபாடு) என்று அம்பிகையிடம் கூறினார். அது கேட்ட காமாக்ஷியும் "நாத! நீ மொழிந்த ஆகமத்தின் இயல்பினால் உனை அர்ச்சனை புரியப் பொங்குகின்றது என் ஆசை" என்று இறைஞ்சினாள். அதன் பிறகு இறைவனாரும் "தென்னாட்டில் உள்ள காஞ்சியில் பூசனை மகிழ்ந்து செய்வாய்" என்று ஏவினார் என்ற வரலாற்றைச் சேக்கிழார் பெருமான் கூறி இறைவர் தாம் விரும்புவது பூசனை என்ற வழிபாடே என்றும், அவ் வழிபாட்டுற்கு ஆகமங்கள் வேண்டுவன என்றும் நமக்கு உணர்த்தியுள்ளார். சிவ பெருமான் வழிபாட்டிற்கு அறமும் அன்பும் வேண்டுவன. வேதங்கள் அறம், பொருள், இன்பம் ஆகிய அறநெறிகளை நமக்குப் போதிக்கின்றன. ஆகமங்கள் அன்பையே அடிப்படையாகக் கொண்டு வழிபாட்டிற்கு வேண்டுவன வற்றைப் போதிக்கின்றன. வழிபாட்டிற்கு அன்பு அவசியம்.

" அரனடிக்கு அன்பர்செய்யும்
பாவமும் அறமதாகும்
அரனடிக்கு அன்பிலாதார்
புண்ணியம் பாவமாகும்
வரனுடைத்தக்கன் செய்தமா
வேள்வி தீமையாகி
நரரினிற் பாலன்செய்த
பாதகம் நன்மையாய்த்தே"

என்ற பாடலில் அருள் நந்தி சிவாச்சாரிய சுவாமிகள் அன்பையே சிவபெருமான் விரும்பு

கின்றார் என்பதைத் தெரிவித்தார்கள். அறத்திற்கும் அன்பிற்கும் இரண்டு எடுத்துக் காட்டுகள். தக்ஷன் பிரம்மாவின் புத்திரன். உலகெல்லாம் ஆளும் வரம்பெற்றிருந்தான். வேதம் விதித்த அறத்தை மேற்கொண்டு பெரிய வேள்வியைச் செய்தான். இறைவனிடம் அன்பைச் செலுத்த அவன் அகந்தை இடந்தரவில்லை. இதன் காரணமாக அன்பற்ற அம் மாபெரும் யாகம் (பாவமாகி) தீமையாகி தக்கனுக்கு அழிவைத் தந்தது. அன்பில்லாத அறம் அதர்மமான வரலாறு இது. இன்னொன்று அன்பின் காரணமாகச் செய்த மாபாதகம் நன்மையாக முடிந்த கதை.

தமிழ் நாட்டில் சேய்ஞலூர் என்ற ஊரில் எச்சதத்தன் என்ற அந்தணர்க்குப் பிறந்தவர் விசார சருமர். இப்பெயர் சண்டிகேசுவர நாயனுருக்கு அவர் பெற்ரோரால் வைக்கப் பெற்ற இயற்பெயர். ஐந்து வயதில் வேதாங்கங்களைக் கற்கத் தொடங்கினுர் விசாரசருமர். அப்போது புஷ்பங்கள் மலர்ந்தவுடன் மணம் வீசுவது போல முந்தை அறிவின் தொடர்ச்சியினுல் விசார சருமர் சிந்தையில் ஆகம உணர்வு பெருகிற்று. அதனுல் அன்பு வெளிப்பட்டது. இடையர்கள் மேய்ப் பதற்காக ஓட்டிச் செல்லும் பசுக்களை அடித்துத் துன்புறுத்துவதைக் கண்டார். அதனுல் மாடுகளைத் தாமே மேய்த்து வரத் தொடங்கினுர். பசுக்களின் பாலைச் சிவலிங்க வழிபாட்டிற்குப் பயன் படுத்திஞர். இதையறிந்த எச்சதத்தன் பசுக்களின் பால் குறைவதற்குக் காரணமான சிவலிங்கத்தைத் தம் காலால் உதைத்தார். வழிபாட்டில் ஈடுபட்டிருந்த விசாரசருமர் சிவலிங்கத்தை உதைத்தவர் தம் தந்தை என்றும் பாராது அங்கிருந்த தர்ப்பைப் புல்லை மழுவாகி ஏந்தித் தந்தையின் கால்களை மிகக் கோபமாக வெட்டி எறிந்தார். தற்தையின் கால்களைத் தனயன் துன்டிப்பது பாதகமல்லவா? அன்பின் காரணமாக அறமற்ற-யாரும் செய்யத் துணியாத பாதகத்தைச் செய்தபாலகன் விசார சருமருக்கு அன்பின் வடிவமான சிவபெருமான் உமாதேவியோடு காட்சி தந்தார். இறைவன் தம் அன்புக்கரங்களில் அச்சிறுவனைத் தீண்டி "நம் பொருட்டுப் பெற்ற தந்தை கீழே விழக் கால்களைத் துணித்தாய்! அடுத்த தந்தை இனி உமக்கு நாம் என்ருர்".

"நாம் உண்ட கலமும் உடுப்பனவும் சூடுவனவும் உனக்காகச் சண்டீசனுமாம் பதந் தந்தோம்" என்று கூறிச் சண்டிகேசுவரர் என்ற பெயரையும், அப்பாலகனின் திருமுடியில் தம் கொன்றை மாலையையும், சூட்டினுர் சிவபெருமான். இன்றும் திருக்கோயில்களின் ஈசான்ய (வடகிழக்கு) திசையில் கர்ப்பக் கிரஹத்திற்கு அருகில் பக்த வர்க்கத்தில் அன்பிற்கு அறிகுறியாக சண்டிகேசுவரரின் பொற்கோயில் அமைந்திருப்பதைக் காணலாம். இச் சண்டிகேஸ்வரவழிபாடு ஆகம விதிப்படியும், சேக்கிழார் கூறியதற்கு ஒட்டிய முறையிலும் இக்காலத்தில் திருக்கோயில்களில் நடை பெறுவதாகத் தெரிய வில்லை. பிர்மபுத்ரனுகிய தக்ஷன் அன்பில்லாமல் அழிந்ததையும், மானிடப் பிறவியில் தோன்றி மாடு மேய்த்த சிறுபாலகன் அன்பின் காரணமாக ஆலயங்களில் ஈஸ்வரனுக்கு மிக அண்மையில் மழுவோடு "தொண்டர்களுக்குத் தலைவனுக" பொற்கோயிலினுள் கம்பீரமாக வீற்றிருப்பதையும் கொண்டு இறைவனிடம் அன்பு செலுத்துவதே அறமென்று உணரலாம். திருக்கோயில் வழி பாட்டிற்கு அறமும் அன்பும் வேண்டுவன என்றும், அறநெறியையும் அன்பும் நெறியையும் போதிக்கும் வேதாகமங்களே ஆலய வழிபாட்டிற்கு வேண்டுவன என்று இக்கட்டுரையிற் காட்டப் படுகிறது. அறநிலையங்களாகத் தமிழ் நாட்டில் எங்கும் திருக்கோயில்களைக் காண்கிருேம். வேதாகமங்கள் வடமொழியில் மட்டுந்தான் இருக்கிறதென்று முடிவு கட்டிவிடலாகாது. திருக்குறள் பன்னிரு திருமுறைகள் — சித்தாந்த சாஸ்திரங்கள் ஆகிய தமிழ் நூல்களும் தமிழ் மொழி மொழியிலுள்ள வேத சிவாகமங்களேயாகும். இந் நூல்களையும் — வடமொழி வேதாகமங்களையும் ஆதாரமாகக் கொண்டு திருக்கோயில் வழிபாடுகளை அற ஒழுக்கமும் அன்பும் பூண்டு நல்ல முறையிற் செய்து இறைவன் திருவருளைப் பெறுவோமாக! ★



# மேல்நாட்டினரைக் கவர்ந்த நமது அறநிலையங்கள்

திரு. சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், B.A.,B.L.,

வடமேற்கி லிருந்தும், மேற்கி லிருந்தும் நமது நாட்டிற்கு வந்து நம்மை ஆளத் தொடங்கினவர்கள் இருவகைப் பட்ட சமயத்தினர்கள். அவர்களில் வட மேற்கிலிருந்து வந்தவர்கள் நமது அற நிலையங்களை அழித்தார்கள். மேற்கி லிருந்து வந்தவர்கள் அவைகளை அழிக்க வில்லை. அழிமானமும் பாதுகாப்பும் அவ ரவர்கள் சமயக் கொள்கைகளைப் பின் பற்றியவை. மேற்கே இருந்து கடல் கடந்து வந்த வெள்ளையர்கள் நமது அற நிலையங்களை அழிக்காமல் பாதுகாத்தும் வந்தனர். சிலர் ஆதரித்தும் வந்தனர். அன்பு மேலிட்டுச் சிலர் நன் கொடைகள் கொடுத்துதவியும் திருப்பணிகளைச் செய்து போற்றியும் வந்தனர். அந்தச் செய்திகள் இக்காலத்தில் வியப்பைத் தரும். ஆகவே அவைகளில் சிலவற்றை இங்கே எடுத்துக்காட்டுக்களாகக் குறிப் போம்.

கொங்கு நாட்டை ஆங்கிலர்கள் 1799 ல் கைப்பற்றி ஆண்டார்கள். முதலில் அதனை இரண்டு மாவட்டங் களாகப் பிரித்து வடபகுதியைப் பவானி யிலிருந்தும் தென் பகுதியைத் தாராபுரத் திலிருந்தும் ஆட்சி நடத்தினார்கள். அவ் வாறு பவானி ஒரு மாவட்டத்தின் தலை நகராக 1805 வரையில் இருந்தது. அதற் குக் **காரோ** (Garrow) என்ற ஒரு ஆங்கிலர் மாவட்டத் தலைவர் (Collector) ஆகப் பணி செய்தார். அக்காலத்தில் அவ ரது இருப்பிடம் பவானிக் கோயிலுக்கும் பவானி ஊருக்கும் இடையில் கோட்டை அரண்மனை போலக் கட்டப்பட்டிருந்தது. அது தற்போது இரட்டை மாடி கொண்ட விடுதியாக இருக்கிறது. அந்த மாளிகை மாடியிலிருந்து தெற்கேபார்த்தால் **பவானி சங்கமேசுவரர்** கோயிலும் அதில் உள்ள மண்டபங்களும் நன்கு தெரியும். காலா காலங்களில் கோயிலில் நடை பெறும் பூசைகளின் ஓசையும் ஓதுவார் இசைக் கும் துதிப் பாடல்களும் வெகு நன்ருகக் கேட்கும். எதிரே பவானியும் காவேரியும் சங்கமமாகும் கூடுதுறையின் நீர்ப்பரப்பு கண்களுக்கு இனிமை தோற்றுவிக்கும். ஓதுவார் அன்பு மீறப் பாடுகையில்,

"பந்தார் மடவிரலார்......திருநணுவே"

என்ற திருஞானசம்பந்தர் அருளிய அருட்பாடல் கேட்போர் மனத்தை உருக்கி விடும். அந்தக் காட்சிகளை யும் இன்னிசையையும் நாள் தோறும் **காரோதுரை** பார்த்தும் கேட்டும் மகிழ்ந்து வந்தார். கோயில் நடவடிக்கை முழுவதும் அவருக்கு மனப்பாடம். இறைவனிடம் அன்பில் திளைத்தார். ஒரு முறை தனக்கு உடல் நலிவு உற்ற போது வேத நாயகி அம்மனை நோக்கித் துதித்தார். மறு நாட் காலையிலேயே நலிவு மறைந்து விட்டது. தன் விண்ணப்பம் அங்கீகரிக்கப் பட்டதை நினைந்து நினைந்து உருகி நன்றி செலுத்தும் முறையில் இறைவிக்கு யாது செய்வது என்று எண்ணினார். கோயில் அதிகாரிகளைக் கேட்டார். பள்ளி யறை ஊஞ்சல் பழுதாகி இருந்தது என்று கேள்வியுற்ருர். உடனே ஒரு ஊஞ்சல் பல் லக்கு செய்து தருவது என்று நிச்சயித் தார். நல்ல தச்சச் சிற்பிகளை அழைத்து

மரத்திலும் தந்தத்திலும் ஒருபல்லக்கைச் செய்வித்தார். அதில் 'காரோ உபயம்' என்றும் தீட்டிவைத்தார். இந்த அறச் செயல் நடந்து 60 ஆண்டுகள் ஆகின்றன. கோயில் பள்ளியறையில் அந்தப் பல்லக்கை இன்றைக்கும் காணலாம். ஆங்கில ஆட்சியின் தொடக்கத்தில் நமது நாட்டிற்கு வந்த வெள்ளையர் தலைவர்கள் பலரும், தெய்வ நம்பிக்கையும் அன்பும் கொண்டவர்கள். மக்களிடத்தில் வெகு பிரீதியுடன் ஆட்சி புரிந்தார்கள். அப்படிப் பட்டவர்களில் ஒரு அன்பர் **காரோ** என்ற தலைவர் ஆவார்.

தொண்டை நாட்டில் செங்கல்பட்டு மாவட்டத்தில் இரண்டு பழங் கோயில்களிலே மேல் நாட்டுத் தலைவர்கள் திருப்பணி செய்திருக்கிறார்கள். அவைகளில் ஒன்று காஞ்சி நகரம் ஆகும். **"நகரேஷு காஞ்சி"** என்ற பழமொழிக்கு இலக்காகப் பண்டை நாளில் காஞ்சிபுரம் தென்னாட்டிலேயே சிறந்து விளங்கியதன்றிப் பரத கண்டத்திலேயே ஒரு சிறந்த நகரமாக இருந்தது. பல்லவ மன்னர்கள் அதனைத் தலைநகராகக் கொண்டு அதனை மிகவும் அழகு படுத்தினார்கள். மகேந்திர வர்மனும் அவன் சந்ததியார்களும் காஞ்சியை ஒரு அருங்கலைக் கூடம் ஆக்கினார்கள். மூன்றாம் நூற்றாண்டு முதல் பத்தாம் நூற்றாண்டு வரை அங்கே பௌத்தம், சமணம், சைவம், வைணவம் முதலிய எல்லாச் சமயங்களும் சிறந்து விளங்கின. ஏகாம்பரநாதர் கோயில் (பெரிய அல்லது சிவகாஞ்சி), வரதராசர் கோயில் (சின்ன (அல்லது விஷ்ணுகாஞ்சி) திருப்பருத்திக் குன்றம் (ஜைன அல்லது சமண காஞ்சி) என்ற முப் பிரிவுகளாக விளங்கிற்று. அந்நகரில் தற்போது 36 பெருங்கோயில்களும், கணக்கற்ற சிறு கோயில்களும் இருக்கின்றன. அவற்றில் மிகப் பெரிதாக விளங்குவது ஏகாம்பரநாதர் கோயில். அது தான் பெரிய காஞ்சி. அதன் சுற்று மதிலைப் பார்க்கிறவர்கள் மிகவும் வியப்பு அடைவார்கள். கோட்டை மதில்களைப் போல நீளமாகவும் உயர்வாகவும் இருக்கிறது. அம்மதிலில் சைவ, வைணவ, பௌத்த, சமண உருவங்கள் ஆங்காங்கே புதைக்கப்பட்டும் சேர்த்தும் கட்டப்பட்டுள்ளன. புத்தருடைய மகாநிர்வாணம் முதலிய பண்டைய உருவங்களைக் காணலாம். சிவாலயத்தில் ஏன் இவ்விதம் கலப்பு ஏற்பட்டிருக்கிறது என்ற கேள்வி தோன்றும். ஆங்கிலர் தென்னாட்டிற்கு வந்தபோது இந்த மதிற்சுவரில் பல இடங்கள் சிதைந்து கிடந்தன. பாம்பும் தேளும் அதன் பொந்துகளில் வசித்தன. அன்பர்கள் கோயிலுக்குள். செல்ல அஞ்சினார்கள்.

அப்போது செங்கல்பட்டு மாவட்டத் தலைவரான (கலெக்டர்) **ஹாட்ஸ்ஜன்** (Hogdson) என்றவர் ஆளுகைகுள் காஞ்சிபுரம் இருந்தது. அவர் கி. பி. 1799-ல் அம்மதிலைப் பழுதுபார்க்கும்படி ஆணையிட்டார். திருப்பணியும் தொடங்கியது. இடிந்துபோன பழைய கட்டிடங்களில் இருந்த கற்களை எல்லாம் சேகரித்து அந்த மதிலைக் கட்டினார்கள். அந்த வெள்ளையர் அம்மதிலில் 30 கெஜம் மட்டும் கட்டி முடித்தார். அவ்வாறு கட்டுகையில் சைவ வைணவ பௌத்த சமண சிற்பக்கற்கள் இனம் தெரியாமல் சேர்த்திக் கட்டி விட்டார்கள். சுலபத்தில் வேலையும் முடிந்தது. இல்லாவிடில் அந்நாளில் கருங்கல் பெறுவதே அரிது. மதிலும் முடிந்திராது. இந்தத் திருப்பணி செய்தவர் ஒரு ஆங்கிலர். அவர் செய்த ஒரு நற் செயலுக்காக மக்கள் அவரது ஞாபகச் சின்னமாகக் காஞ்சியில் ஒரு பேட்டைக்கு அவரது பெயரையே இட்டு வழங்குகிறார்கள். அது தான் **ஆடிசன் பேட்டை** என்ற கடைத்தெருப் பகுதி ஆகும்.

செங்கல்பட்டு மாவட்டத்தில் ஒரு சிறந்த வைணவத்தலம் மதுராந்தகம் என்ற ஒரு பழைய ஊர் ஆகும். அது தென்னாட்டில் சென்னைக்குத் தெற்கே உள்ள ஒரு இருப்புப் பாதை நிலையம் ஆகும். அங்குள்ள திருமால் கோயில் பெரியது. அருகே யுள்ள ஏரியும் மிகப் பெரியது. அவ்வேரியில் வெள்ளம் வந்து நிறைந்து விட்டால் கடலைப்போன்ற பயங்கரத் தோற்றம் அளிக்கும். ஒரு

முறை அதன் கரை உடைந்து கீழே இருந்த நாட்டுப்புறங்களையும் ஊர்களையும் விழுங்கி விடும் படியான அபாய நிலை ஏற்பட்டது. அப்போது மக்கள் பீதி அடைந்து திருமாலை வணங்கினர்கள். அவர்கள் அன்புப் பெருக்கில் ஈடுபட்ட இராமபிரான் அந்த உடைப்பைத் தடுத்து நின்றார். கஜேந்திரனைக் காக்க விரைந்து வந்த ஆதி மூலத்தைப் போல மதுராந்தகத் திறைவனை இராமன் அந்த ஏரியைக் காத்து மக்களின் பீதியைப் போக்கினர். அது முதல் அந்த மூர்த்திக்கு **"ஏரிகாத்த இராமன்"** என்ற பெயர் வந்தது. அந்த ஊரில்தான் இராமானுஜரின் ஆசிரியர் **யாதவப் பிரகாசர்** முற்பிறப்பில் தோன்றினது என்பர். அந்த ஏரியை "மதுராந்தகத் தண்தடம்" என்கிறார் **சடகோபதாசர்** என்ற பெரும் புலவர். அவ்வூர்த் திருமால் கோயிலில் ஒன்றரை நூற்றாண்டுகளின் போது திருப்பணி நடந்தது. அப்போது அம்மன் கோயில்திருப்பணியை மாவட்டத்தலைவர் **ப்ளேசு** (Place) என்ற ஒரு வெள்ளையர் நடத்தினர். அந்தச் செய்தியை அந்த வெள்ளையர் மகாமண்டபத்தின் உத்தரத்தில் எழுதியும் வைத்திருக்கிறார். அவர் தன் பெயரையும் அந்த விட்டத்தில் செதுக்கி வைத்துள்ளார். அந்தக் கல் வெட்டு தெலுங்கிலும் தமிழிலும் வெட்டப் பட்டிருக்கிறது. கோயிலின் தென்புறச் சுவரில் ஒரு ஆளின் சிறிய உருவம் சித்தரிக்கப் பட்டிருக்கிறது. அது தான் **ப்ளேசு** என்ற கலெக்டரின் உருவம் என்பர். அதே கோயிலில் ஆண்டாள் கோயிலிக்குப் பின்புறத்தில் ஒருமேடையும் மகிழ மரமும் இருக்கின்றன. அந்த மரத்தின் கீழ் தான் **உடையவர்** பெரிய நம்பிகளிடம் பஞ்ச சம்ஸ்காரம் செய்து கொண்டனராம். இக்கோயில் உடையவரின் தொடர்பு கொண்டிருப்பதினல் மிகப்புனித இடம் ஆகும். இந்தப்புனித இடத்தில் ஒரு வெள்ளை அதிகாரி 164 ஆண்டுகளுக்கு முன் திருப்பணி செய்தார் என்றால், அது வியக்கத் தக்க தல்லவா ?

தென் ஆர்க்காடு மாவட்டத்தில் **திண்டிவனத்திற்கு** அடுத்தாற் போல **மயிலம்** என்ற ஒரு குன்று இருக்கிறது. அக் குன்றின் மீது ஒரு அழகிய முருகபிரான் கோயில் விண்ணைத் தொட்டுக் கொண்டு நிற்கிறது. அக் கோயிலை நடத்துபவர் அங்கே இருக்கும் வீரசைவ மடத்துச் சுவாமிகள். அம்மடத்துச் சார்பில் ஒரு செந்தமிழ்க் கல்லூரி தற்போது நடைபெறுகிறது. கோயிலில் நடை பெறும் சடங்குகள் எல்லாம் வெகு புகழ் பெற்றதாக இருக்கும். இந்தமடாலயம் புதுச்சேரி வட்டத்தில் உள்ள **பொம்மையபாளையம்** பெரிய மடத்திற்குச் சேர்ந்தது. பொம்மையபாளையத்து ஆதி சுவாமிகள் **சிவஞான பாலைய சுவாமிகள்** ஆவார். அந்த மடத்துக் குரு பரம் பரம்பரையில் வந்தவர் தற்போதைய சுவாமிகள். இந்த மடாலயத்தில் விளங்கிய புலவர்கள் மிகச்சிறந்த கவிஞர்கள். மூன்று நூற்றாண்டுகளுக்கு முன் பெரும் புலவராக விளங்கியவர் **பிரபுலிங்கலீலை** முதலான வீரசமய நூல்களை யாத்த **சிவப்பிரகாசர்** ஆவார். அவருடைய சீடபரம்பரையில் வந்தவர்கள் **திருப்பேரூர் சாந்தலிங்கர், துறையூர் குமார தேவர், திருப் போரூர்ச் சிதம்பர சுவாமிகள்** முதலியோர். இப்படிப்பட்ட குரு பீடம் பல நூற்றாண்டுகளாகச் சிறந்து வந்திருக்கிறது.

பொம்மையப் பாளையத்து மடாதிபதிகள் புதுச்சேரி ஆட்சியாளர்களாக இருந்த பிரஞ்சுக் கவர்னர்களால் போற்றப் பட்டனர். பிரஞ்சு கவர்னர்கள் அம் மடத்திற்கு அடிக்கடி சென்று சுவாமிகளை வணங்கியும் உபதேசங்களைக் கேட்டும் வந்தார்கள். தாங்கள் கொண்டிருந்த ஆட்சிக்கு மடத்தாரின் செல்வாக்கு பயனுள்ள தாக இருந்தது. அக்காலத்தில் ஆங்கிலேயருக்கும் பிரஞ்சுக்காரருக்கும் அடிக்கடி போராட்டம் நேர்ந்த துண்டு. தென்னட்டில் வெள்ளையரில் யார் ஆதிக்கம் பெறவேண்டும் என்ற போட்டி இருந்தது. அப்போது செல்வாக்கு நிறைந்த மடாதிபதிகளை வெள்ளையர்கள் நாடித் தயவு பெற முயற்சித்தார்கள். பிரஞ்சு கவர்னர்களில் டூப்ளே (Dupleix) (1697-1763) என்றவன் திறமைசாலி. மிக ஆற்ற

லுடன் பிரஞ்சு அதிகாரத்தைப் பெருக்கினன். அவன் அடிக்கடி பொம்மைய பாளையம் சிவஞான பாலைய சுவாமிகளின் தயவை நாடினன். சுவாமிகளைப் பார்க்கப் போன போது எல்லாம் விலையுயர்ந்த பரிசுகளைக் கொண்டு சென்று சமர்ப்பிப்பான். துப்பட்டாக்கள், சால்வைகள், வேட்டிகள், பன்னீர்ப் புட்டிகள் முதலிய பொருள்களைப் பரிசுகளாக வழங்கினன். டூப்ளேக்கு துபாஷி (Dubash) யாக இருந்தவர் பிரம்பூர் **ஆனந்தரங்க பிள்ளை** என்ற பிரபு. அவர் நாள் தோறும் நடக்கும் செய்திகளை யெல்லாம் தமிழில் ஒரு தினசரியாக எழுதி வைத்துள்ளார். இந்தத் தினசரி தமிழ்மொழியில் தனித்து நிற்கும் பெருமை பொருந்தியது. அதில் அக்காலத்தில் நடந்த சரிதம் புலப்படும் குறிப்புக்கள் நிரம்ப இருக்கின்றன. அதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துச் சென்னை அரசியலார் வெளியிட்டிருக்கிருர்கள். அந் நூலில் பொம்மைய பாளையம் மடத்திற்கும் பிரஞ்சு அதிகாரிகளுக்கும் இருந்த தொடர்பு கூறப்பட்டுள்ளது. **டூப்ளே** தென் இந்தியாவில் ஆட்சி செய்த காலம் 1742-1754 ஆகும். பொம்மையபாளையத்து மடத்தில் ஆருவது பட்டத்தில் இருந்த **கரையாம் புத்தூர் சிவஞான பாலைய சுவாமிகளை** டூப்ளே சந்தித்து பரிசுகளை வழங்கியது 1744 டிசம்பர் மாதம் 14-ம் தேதி திங்கட்கிழமை மாலை 4 மணிக்கு என்று **ஆனந்த ரங்கப் பிள்ளை** தன் தினசரியில் எழுதியிருக்கிருர். அதற்குப் பின்னரும் பல முறை சந்திப்புகள் நடந்திருக்கின்றன. **பச்சைக்கந்தர்** என்ற சுவாமிகளின் காலத்திலும் நடந்திருக்கின்றன. ஆகவே வெள்ளையர் தலைவர்கள் இந்து சமயத் தலைவர்களை மிகவும் மதித்துப் போற்றி வந்த வகைக்கு இந்த எடுத்துக்காட்டு உதவும் அல்லவா ?

இந்த வகையில் வெகு காலத்திற்கு முந்தியே வெள்ளையர்களை நமது அறநிலையங்கள் கவர்ந்து வந்திருக்கின்றன என அறியலாம். ❋



**தஞ்சாவூர் ஹரிகதா காலட்சேபப் பயிற்சிப் பள்ளித் தொடக்க விழாவில், நமது அறநிலைய ஆணையர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார் B.A., B.L., அவர்கள் உரை நிகழ்த்துதல்,**

# வாயலூர்க் கல்வெட்டுக்கள்

திரு. டாக்டர் மா. இராசமாணிக்கனார், M.A., M.O.L., Ph.D.

வாயலூர் என்பது செங்கற்பட்டு மாவட்டத்தில் பாலாறு கடலோடு கலக்கும் இடத்திற்கு இரண்டு கல் தொலைவில் அவ்வாற்றின் வட கரையில் அமைந்துள்ளது. இது வரலாற்றுப் புகழ்பெற்ற சதுரங்கப் பட்டினத்திற்குத் தெற்கில் மூன்றுகல் தொலைவில் உள்ள சிற்றூராகும்.



வாயலூர்க் கோயிற் கோபுர மண்டபம்,
இராஜசிம்மன் கல்வெட்டுள்ள தூண்மண்டபம்.

## பண்டைப் பெரிய கோவில்

இவ்வூரில் பெரிய சிவன் கோவில் ஒன்று இடிந்து கிடக்கிறது. அக்கோவில் சிவலிங்கம் உள்ள கருவறை மட்டுமே நல்ல நிலையில் இன்று காணப்படுகிறது. லிங்கம் மிகச் சிறியது. அக்கருவறையின்மீது தூங்கானை வடிவத்தில் விமான அமைப்பு உள்ளது. இத்தகையவிமானங்களைக் கொண்ட கோவில்கள் செங்கற்பட்டு மாவட்டத்தில் மிகுதியாகும். கருவறைக்கு இடப்பக்கம் பெருமாள் கோவில் இடிந்து கிடக்கிறது. *அதற்கு அப்பால் இருந்த மண்டபங்கள், வேறு சிறு கோவில்கள், திருச்சுற்று, கோவில் கோபுரம் ஆகிய அனைத்தும் இடிந்து கிடக்கின்றன. இவை அனைத்தும் கருங்கல் கட்டடங்களாயிருந்தவையே யாகும். இவை அனைத்தையும் தன்னகத்தே கொண்ட பெரிய கோவில் பண்டைக் காலத்தில் கம்பீரமான தோற்றப் பொலிவுடன் இருந்திருத்தல் வேண்டும் என்பதை, இவற்றை ஒரு முறை பார்வையிடும் நன்மக்கள் எளிதில் அறிந்து கொள்ளலாம்.

## கல்வெட்டுக்கள்

இக்கோவிலில் ஏழுகல்வெட்டுக்கள் உள்ளன. அரசாங்கக்கல்வெட்டு அதிகாரிகள் 1919 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 11 ஆம் நாள் முதல் 15ஆம் நாள் வரையில் இக்கோவிலைப் பார்வையிட்டு இக்கல் வெட்டுக்களைப்படி எடுத்தனர்.

1, கோவிலின் நுழைவாயில் மண்டபம் பெரிதும் ஆட்டங் கண்டுள்ளது. அம்மண்ட



கோயிற்கருவறையின் தூங்கானைமாட அமைப்பு

---

* இது ஆற்றோரம் இருந்த பெருமாள் கோவில் அழிவிலிருந்து கொண்டு வரப்பட்ட சிலைகளுக்காக அமைக்கப்பட்ட கோவிலாகலாம். இது பற்றிப்பேசும் கல்வெட்டில்லை.

பத்தின் வலப்புற முதல் தூணில் காஞ்சிபுரம் கயிலாச நாதர் கோவிலைக் கட்டிய இராசசிம்ம பல்லவன் (கி.பி. 685-705) கல்வெட்டுக் காணப்படுகிறது. அது பல்லவ-கிரந்த எழுத்துகளைக் கொண்டது. இப்பொழுது எழுத்துக்கள் அழிந்து வருகின்றன.

2. அதே மண்டபத்திலுள்ள சிதறுண்ட கற்களில் ஒரு கல்வெட்டுக் காணப்படுகிறது. அது முதற் பராந்தக சோழன் காலத்தில் தொண்டை நாட்டை வென்ற இராஷ்டிரகூட மன்னனான மூன்றாம் கிருஷ்ணன் என்ற கன்னரதேவன் (கி.பி. 939-968) காலத்தது. அது தமிழ்க் கல்வெட்டாகும்.

3. அதே மண்டபத் தரையில் உள்ள கல் மீது தமிழ்க் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. அது பிற்காலச் சோழப் பேரரசருள் பெருஞ் சிறப்புப் பெற்ற முதலாம் இராசராசன் (கி.பி. 985-1012) 12 ஆம் ஆட்சியாண்டில் (கி.பி. 996-இல்) வெட்டப்பட்டது.

4. இன்று நன்னிலையிலுள்ள சிவன் கோவில் கருவறையின் மேற்குச் சுவர்மீதும் தெற்குச் சுவர்மீதும் வெட்டப்பட்டுள்ள தமிழ்க் கல்வெட்டு ஒன்றாகும். அது திரிபுவன சக்கரவர்த்தி ஜடாவர்மன் ((முதலாம்) சுந்தர பாண்டியதேவன் (கி.பி. 1251-1271) எட்டாம் ஆட்சி ஆண்டில் (கி.பி. 1258-ல்) வெட்டப்பட்டது.

5. அதே கருவறையின் வடசுவர் மீதுள்ள தமிழ்க்கல் வெட்டு ஒன்று விசயநகர அரசரான முதலாம் விருபாட்சர் காலத்தில் (கி.பி. 1404-ல்) வெட்டப்பட்டது.

6. அதே கருவறையின் வடசுவர்மீதுள்ள மற்றொரு கல்வெட்டு விசயநகரப் பேரரசரின் பிரதிநிதியாகத் தொண்டை மண்டலத்தில் இருந்துவந்த மகாமண்டலேசுவரர் நாயதரிசி பொம்மைய தேவமகாராயர் காலத்தது. (கி.பி. 1427).

7. அழிந்து கிடக்கும் மண்டபத்தின் கிழக்குச் சுவர்மீதுள்ள தமிழ்க் கல்வெட்டு, விசயநகரப் பேரரசரான இரண்டாம் தேவராயர் காலத்தது. (கி.பி. 1422-1446).



தஞ்சாவூர் ஹரிகதா காலட்சேபப் பயிற்சிப் பள்ளித் தொடக்க விழாவில் நமது அறநிலைய அமைச்சர் திரு. M. பக்தவத்சலம், B.A.,B.L., அவர்கள் முதலிய பெருமக்கள் பலரும் கலந்து கொண்டு சிறப்பித்தல்.

## இக்கல்வெட்டுக்களிற்கண்ட அரசர் காலங்கள்

1. இராஜசிம்மன் (பல்லவன்) கி.பி. 685-605

2. கன்னரதேவன் (இராஷ்டிரகூடன்) கி.பி. 939-968

3. முதலாம் இராசராசன் (சோழன்) கி.பி. 985-1012

4. முதலாம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் (பாண்டியன்) கி.பி. 1251-1271

5. முதலாம் விருபாட்சன் (விசயநகர வேந்தன்) கி.பி. 1404

(இவன் ஆட்சி மிகச்சில மாதங்களே நடைபெற்றது)

6. பொம்மைய தேவராயர் (விசயநகர மண்டலேசுவரர்) கி.பி. 1427 (கல்வெட்டின் காலம்)

7. இரண்டாம் தேவராயர் (விசயநகர வேந்தன்) கி.பி. 1422-1446.

இவருள் சிலரது காலத்துக் கல்வெட்டுக்களில் ஆட்சியாண்டுகள் குறிக்கப்படாமையால் கல்வெட்டுத் தோன்றிய ஆண்டைத் திட்டமாகக் கூறக்கூடவில்லை. மேற்கண்ட அரசர் காலங்களை நோக்க வாயலூர்க் கோவில் கி.பி. 7 ஆம் நூற்றுண்டின் இறுதியிலிருந்து கி.பி. 15 ஆம் நூற்றுண்டின் முற்பகுதிவரையில் நல்ல நிலையில் இருந்த தென்று கூறலாம். ஆயின் இன்றுள்ள கோவில் இராசசிம்மன் காலத்ததா? என்பது ஆராய்ச்சிக்குரியது.

## இன்றுள்ள கோவில்

பல்லவர் அமைத்த கோவில்களில் எட்டுப் பட்டை லிங்கம் அல்லது பதினறு பட்டை லிங்கமே இருக்கும்.[2] ஆயின் இன்றுள்ள வாயலூர்க் கோவிலில் அத்தகைய லிங்கம் இல்லை; பட்டை இடப்பெருத சிறிய அளவுள்ள லிங்கமே உள்ளது.



கோயிற் கருவறையின் இடப்புறம் உள்ள அறுமுகன் சிலை

பல்லவர் கோவிற் கருவறையில் லிங்கத்திற்குப் பின்புறச் சுவரில் சோமாஸ்கந்தர் உருவம் சுவர்க் கல்லிலேயே செதுக்கப்பட்டிருக்கும்; அல்லது அவ்வுருவம் கொண்ட கல் சுவரில் பொருத்தப்பட்டிருக்கும். ஆயின், வாயலூர்க் கோவில் கருவறையில் லிங்கத்திற்குப் பின்புறச் சுவரில் இவ்வுருவச் சிலை தனியே காணப்படுகிறது. இது சுவருக்கு வெளியே முன் தள்ளியுள்ளது. இவ்விரண்டும் இக்கருவறை பல்லவர் கட்டியதன்று என்பதைத் தெளிவாகத் தெரிவிக்கின்றன. ஆயின், கோவிற் கோபுர மண்டபத்தில் உள்ள பல தூண்கள் பல்லவர் காலத்தனவே யாகும். இவை அனைத்தையும் நோக்க, பல்லவர் காலத்திற் கட்டப்பட்ட முதற்கோவில், காலப்போக்கில் அழிந்து புதுப்பிக்கப்பட்டிருக்கலாம். இப்பொழுது அழிந்துகிடப்பது போலவே இடைக் காலத்திலும் அழிந்திருக்கலாம்-பின்பு புதுப்பிக்கப்பட்டிருக்கலாம் என்று கொள்வதே பொருத்தமாகும்.[3]

## கல்வெட்டுக்கள் கூறுவன

1. இராஜசிம்மன் காலத்துத் தூண் கல்வெட்டு 14 வரிகளையுடையது; இறுதியில் இரண்டு சுலோகங்களையும் கொண்டது. முதல் பதினன்கு வரிகளில் இராஜசிம்மன் பெயர் முடிய 42 பெயர்களைக் கொண்ட பல்லவர் பட்டியல் தரப்பட்டுள்ளது.

---

2 The linga of the Vyagrapurisvara temple is plain and does not show the eight or sixteen facets which is one of the special feautures of the siva - lingas set up by the Pallava Kings after Mahendravarman I — Rao Bahadur H. Krishna Sastry, Epigrahia Indica, Vol. 18, p. 146, foot note—1.

3 Ibid. 146



கோயில் வெளியறையிலுள்ள சிலைகள்

அப்பெயர்களைக் கீழே காண்க:

பிரமன், அங்கீரசன், பிரகஸ்பதி, சம்யு, பாரத்துவாசன், துரோணன், அசுவத்தாமன். பல்லவன், அசோகன், அரிகுப்தன், ஆரிய வர்மன், விமலன், கொண்கணிகன், காலபர்த் திரன், குட்ட பல்லவன், வீரகூர்ச்சன், சந்திர வர்மன், கராளன், விஷ்ணுகோபன், கந்த மூலன், குமாரவிஷ்ணு, குப்தவர்மன், கந்த வர்மன், விஷ்ணுகோபன், விஷ்ணுதாசன், கந்தவர்மன், சிம்மவர்மன், வீரவர்மன், கந்த வர்மன், சிம்மவர்மன், கந்தவர்மன், நந்தி வர்மன், சிம்மவர்மன், சிம்மவர்மன், விஷ்ணு கோபன், சிம்மவர்மன், சிம்ம விஷ்ணு, மகேந் திரவர்மன், நரசிம்மவர்மன், மகேந்திரவர்மன், பரமேசுவரவர்மன், இராசசிம்மன்.

பௌராணிக முறையில் பிரமன் முதல் அசோகன் வரையில் சிலபெயர்கள் காணப்படு கின்றன; பின்னர்ப் பிராக்ருத பட்டயங்களை வெளியிட்ட பல்லவர், வடமொழிப் பட்டயங்களை வெளியிட்ட பல்லவப் பெயர்கள் இடம் பெற்றுள் ளன. பின்னர்ச் சிம்ம விஷ்ணு மரபினர் பெயர் கள் (இராஜசிம்மன் பெயர் உட்படத்) தரப்பட் டுள்ளன. இப்பெயர்ப் பட்டியலைப் போல இராஜசிம்மனுக்குப் பின்பு வந்த இரண்டாம் பரமேசுவரவர்மன், மூன்றும் நந்திவர்மன் போன்றவர் பல்லவர் பட்டியலை வெளியிட் டுள்ளனர். இராஜசிம்மனுக்கு முன்னும் சிலர் பட்டியலைத் தந்துள்ளனர். அவற்றுடன் ஒத்திட்டு உண்மைப் பட்டியலைக் கண்டறிய இத்தூண் கல்வெட்டுப் பெரிதும் உதவுகிறது. அதனால் இது வரலாற்றுச் சிறப்புடைய கல் வெட்டாகும். கல்வெட்டறிஞர்கள் இதனை நன்கு ஆராய்ந்து தம் கருத்துக்களை வெளியிட் டுள்ளனர். 4

வடமொழிச் சுலோகங்களில் இராஜசிம்ம னுடைய விருதுப் பெயர்கள் சில இடம் பெற் றுள்ளன. அவன் தலையில் சிவலிங்க வடிவத் தில் அமைந்த முடியைத் தரித்திருந்தான் என்று ஊகிக்கத்தக்க விருதுப் பெயரும் காணப் படுகிறது. இத்தூண் கல்வெட்டு இராஜசிம்மன் முடிசூட்டு விழாவின்போது வெட்டப்பட்ட தென்று ஊகிக்க இரண்டாம் சுலோகம் இடந் தருகிறது. 5

இராசசிம்மன், சங்கரபக்தன், ஸ்ரீ ஆகமப் பிரியன், சைவசித்தாந்தத்தில் வல்லவன், மயேசுவரனைத் தன் தலையில் தாங்கியுள்ளவன் என்று காஞ்சி-கயிலாச நாதர் கோவில் கல் வெட்டுக்களும் தெரிவிப்பதால், இம்மன்னன் சிறந்த சிவபக்தன் என்பது அறியலாம்; அறிய வே இவன் சிவலிங்க உருவில் அமைந்த முடி யைத் தரித்திருந்தான் என்று கருதுதல் பொருத் தமேயாகும்.

2. கச்சியும் தஞ்சையும் கொண்ட கன்னர தேவன் காலத்துக் கல்வெட்டு, கோவிலுக்கு



வாயலூர் வயல்வெளியிலுள்ள இலிங்கம்

4 A. R. E. 1909, pp. 76.77; Epigraphia Indica, Vol. 18, pp. 145—152; Prof. Dubreil. The pallavas; R. Gopalan, Pallavas of Kanchi.
5 Epigraphia Indica, Vol. 18, pp. 149-150.

நிலம் விற்பனை செய்ததைக் கூறுவதாகும். இது கன்னரதேவனின் 22 ஆம் ஆட்சியாண்டில் வெளியிடப்பட்டது.

பெருவீரனுன முதற்பராந்தகன் ஆட்சி இறுதியில் இராஷ்டிரகூட மன்னனுன கன்னர தேவன் சோழரை முறியடித்துக் காஞ்சியை யும் தஞ்சையையும் கைக்கொண்டான். தொண்டைநாடு சிலஆண்டுகள் அவன் ஆட்சி யிலிருந்தது. ஆதலால் வாயலூர்க் கோவிலில் அவன் ஆட்சியாண்டைக் குறிக்கும் கல்வெட் டைக் காண்கிறேம்.

3. மூன்ரும் கல்வெட்டுக் 'காந்தளூர்ச் சாலையில் கலமறுத்த' சோழன் முதலாம் இராச ராசன் காலத்தது. இவனுக்குரிய விருதுப் பெயர்களுள் ஐயங்கொண்டான் என்பதுஒன்று. இவன் காலத்தில் தொண்டை நாடு ஐயங் கொண்ட சோழ மண்டலம் எனப்பட்டது. இவனுக்கு ஜனநாதன் என்றெரு பட்டமும் உண்டு. வாயலூர் இவன் காலத்தில் ஜன நாத நல்லூர் 6 எனப் பெயர் பெற்றது. ஆயின் கோவிற் சிவபெருமான் பெயர் திருப்பிலவாயில் உடையார் எனப்பட்டது. திருப்பிலவாயில் என்பது காலப்போக்கில் திருப்பிலவாயல் என்றும் திருப்பிலவாயலூர் என்றும் மாறி, இன்று வாயலூர் என்ற அளவில் வழங்கி வருவ தாகக் கொள்ளலாம். வாயலூர், ஆமூர்க் கோட்டத்து மோந்தூர் நாட்டு வாயலூர் எனப் பட்டது. வாயலூர்க்கு அண்மையில் கடற் கரையிலிருந்த புதுப்பட்டிணம், ஆமூர்க்கோட் டத்து மோந்தூர் நாட்டுப் புதுப்பட்டினம் 7 எனப்பட்டது.

பிலவாயில் என்பது காலப்போக்கில் புலி வாயில் என்றும் புலிவாயிலூர் என்றும் தவருக உச்சரிக்கப்பட்டது. அதன் விளைவாகவே, வியாக்கிரபுரி என்று வாயலூர்க்குப் பெயர் வந்தது. சிவபெருமானுக்கு வியாக்கிரபுரீசுவரர் என்ற பெயரும் தவருக வழங்கப்பட்டு வரு கிறது என்பன இங்கு அறியத்தகும்.

4. நான்காம் கல்வெட்டு 'எம்மண்டல மும் கொண்டருளிய' திரிபுவன சக்கரவர்த்தி (முதலாம்) ஜடாவர்மன் சுந்தரபாண்டிய தேவ னது 8ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டாகும் (கி.பி. 1258). இவன் மூன்ரும் இராசேந்திர சோழனை வென்று தனக்குத் திறை செலுத்தும் படி செய்தான். அம்மூன்ரும் இராசேந்திர சோழனுக்குப் பிறகு ஏறத்தாழ கி.பி. 1280-ல் சோழநாடு பாண்டியர் ஆட்சிக்கு உட்பட்டது. ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சி தொண் டை நாட்டில் நிலைபெற்ற காலத்திற்றன் அவன் காலத்துக் கல்வெட்டு வாயலூர்க் கோவிலில் இடம் பெற்றது.

அக்கல்வெட்டுக் கூறும் செய்தி யாது?

'திருப்பிலவாயிலுடைய நாயனர் கோவில், கயிலாயமுடைய நாயனர் கோவில், திருச் சிற்றம்பலமுடைய நாயனர் கோவில், பெருமாள் ஸ்ரீ வைகுண்டத்தெம் பெருமான் கோவில்; ஆகிய நான்கு கோவில்கட்கும் சொந்தமான நிலங் களை வாங்கவோ அடைமானம் வைக்கவோ மாட்டோம்' என்று வாயலூர் ஊரவர் ஒப்பந் தம் செய்து கொண்டனர்; ஒப்பந்தத்தை மீறு வோர் சிவத்துரோகத்துக்கும் அரசத் துரோகத் திற்கும் உரிய தண்டனையை ஏற்கவேண்டும் என்பதும் ஒப்பந்தத்தில் குறிக்கப்பட்டது.

(1) இன்று வாயலூரிலுள்ள இடிந்த கோவில் திருப்பில வாயிலுடையார் கோவி லாகும். (2)இன்று வாயலூர் ஏரி ஊர் நோக்கிப் பெரிதாக்கப்பட்டுள்ளது. அப்பகுதியில் நிலத் திற்கடியில் சிவலிங்கம், நந்தி, கோவில் அடிப் படை ஆகியவை கிடைத்தன. இவை கல் வெட்டிற் கண்ட மற்றெரு சிவன் கோவில் என்னலாம். (3) ஊருக்கு 6 பர்லாங்கு கிழக்கில் வயல்கட்கிடையில் மேட்டு நிலத்தில் ஒரு சிவ லிங்கமும் நந்தியும் உள. இம்மேட்டை அடுத் துக் குளம் இருந்து இன்று குட்டையாகக் காட்சி அளிக்கிறது. இதுவும் கல்வெட்டிற் கண்ட மற்றெரு சிவன் கோயிலாகலாம். (4) வாயலூர்க்குத் தெற்கில் இரண்டு பர்லாங்கு தொலைவில் பாலாற்றங் கரையில் பெருமாள் உருவச்சிலை நின்ற கோலத்திலுள்ளது. அதற் கப்பால் ஐம்பதடி அளவு நிலமிருந்தது. அந் நிலம் பாலாற்றுவெள்ளத்தால் அழிந்துவிட்டது. அங்குச் செங்கற்கள், பானை ஓடுகள் காணப் படுகின்றன. அவ்விடத்தில் கல்வெட்டிற்கண்ட

---

6 மாமல்லபுரம் ஜனநாதபுரம் எனப்பட்டது. S. T. I. 500.

7 61 of 1909; மோந்தூர் என்பது திருக் கழுக்குன்றத்துக்குத் தென்மேற்கில் ஏறத்தாழ எட்டுக்கல் தொலைவில் உள்ளது என்பது தெரி கிறது.

பெருமாள் கோவில் இருந்திருக்கலாம். இந் நான்கு கோவில் சின்னங்கள் உள்ள இடங்களை நோக்கப் பழையவாயலூர் பேரூராக இருந் திருத்தல் வேண்டும்என்பது தெரிகிறது.



வாயலூர்ப் பாலாற்றங் கரையிலுள்ள பெருமாள் சிலை

5. ஐந்தாம் கல்வெட்டு விசயநகரவேந்தர் விருபாட்சர் காலத்தது. முதலாம் புக்கராயர் பிள்ளை இரண்டாம் அரிகரராயர். அவர் கி.பி. 1404 ஆகஸ்டு மாதத்தில் இறந்தார். முதலில் அவர் மகனுரான முதலாம் விருபாட்சர் (விருப்பணவுடையார்) அரசராக முடிசூடிக் கொண்டார். அவர் சில மாதங்களே அர சாண்டார். அவர் தம்பியான இரண்டாம் புக்கர் கி. பி. 1405. இல் அரசரானுர்.[8] எனவே அச்சில மாத ஆட்சியில் தோன்றிய கல் வெட்டே ஐந்தாவது.

சயங்கொண்ட சோழ மண்டலத்துப் பட்டின நாட்டு ஜனநாத நல்லூரான வாய லூரைச் சேர்ந்த கைக்கோளர் ஒரு தறிக்கு மூன்று பணம் வீதம் வரிசெலுத்த ஏற்பாடு செய்யப் பட்டது; ஒவ்வொரு கைக்கோளரும் மூன்று தறி வருமானத்தைக் கோயிலுக்கு ஒதுக்கவேண்டும் என்றும் ஏற்பாடு செய்யப் பட்டது. இவ்வைந்தாம் கல்வெட்டு இச் செய் திகளைத் தெரிவிக்கிறது.

வாயலூர் ஆமூர்க் கோட்டத்துப் பட்டின நாட்டைச்[9] சேர்ந்தது. வாயலூரில் கி.பி.15-ஆம் நூற்றுண்டில் கைக்கோளர்[10] இருந்தனர்.— அங்கு நெசவுத் தொழில் நடை பெற்றது, என் பன இக் கல் வெட்டால் அறியப் படுகின்றன.

6. ஆரும் கல்வெட்டும் விசயநகரவேந்தர் காலத்தது. அது இரண்டாம் தேவராயர் ஆட்சியில் (கி. பி. 1422 — 1446) அவரது தொண்டைமண்டலப் பிரதி நிதியாக இருந்த மகா மண்டலேசுரர் நாயதரிசி பொம்மைய தேவமகாராயர் மகன் தருசி திம்மராசர் திருப் பிலவாயிலுடையார் கோவிலுக்குப் படையலுக் காக நிலதானம் செய்தார் என்று குறிப்பது. இதுவும் தமிழ்க்கல்வெட்டே யாகும். இதன் காலம் கி. பி. 1427.

7. ஏழாம் கல்வெட்டு மிகவும் பழுது பட்டுள்ளது. இது மேலே கூறப்பட்ட இரண்டாம் தேவராயர் காலத்தது; கல் வெட்டு வெட்டப் பட்ட ஆண்டு குறிக்கப்பட வில்லை. இதுவும் தமிழ்க்கல்வெட்டாகும்.

---

8 K. A. N. Sastry, A History of South India, pp. 257—58.

9 இன்றுள்ள வாயலூரில் கைக்கோளர் இல்லை. திருக்கழுக் குன்றத்தை அடுத்த தேசு முகிப் பேட்டையில் உள்ள கைக் கோளருள் பத்துக்குடும்பத்தினர் மட்டும் வாயலூரில் உள்ள பாலாற்றம்மன் ( மாரியம்மன் ) கோவிலுக்கு வந்து பூசை செய்து பொங்கலிட்டுத் தம் பிள்ளை கட்கு மொட்டை யடித்துக் காது குத்து கின்றனர். இவர்கள் முன்னோர் வாயலூரில் இருந்தவர் என்பதற்கு இது சான்ருகும். இதனை எனக்கு அறிவித்தவர் தேசுமுகிப் பேட்டை ஆசிரியர் திரு. வீரராகவன் ஆவர்.

மேலும் வாயலூரில் 'பாவோடும் தோட்டம்' என்று இலுப்பைத் தோப்பு ஒன்று இருந்தது. இன்று இலுப்பை மரங்கள் இல்லை. ஆயினும் அவ்விடம் இன்றும் 'பாவோடும் தோட்டம்' எனப் படுதல் கைக்கோளர் இருந்தமைக்குச் சான்ருகும். இதனை எனக்கு அறிவித்தவர் வாயலூர் நிலக்கிழார் திரு. வேதாசல முதலியார் ஆவர்.

10 பாலாற்றுக்குத் தெற்கே வட பட்டினம், தென்பட்டினம் என இரண்டு சிற்றூர்கள் உள. இவை இரண்டும் ஒன்ருக இருந்த போது பட்டினம் என வழங்கப் பட்டிருக்கலாம். அதனைத் தலைநகராய்க் கொண்ட நாடு பட்டின நாடு எனப் பட்டிருக்கலாம்.

திருக்கழுக்குன்றப் பற்று அறம்பாக்கம்11 என்ற ஊரில் இருந்த குறிப்பிட்ட நிலம் பொன்னூர் நாட்டு ஜனநாத நல்லூர் என்ற வாயலூர்க் கோயிலுக்குத் தானமாகக் கொடுக்கப் பட்டது என்பதை இக்கல்வெட்டுத் தெரிவிக்கிறது.

வாயலூர் முதலாம் இராச ராசன் காலத்தில் (கி.பி. 996-இல்) மோங்தூர் நாட்டு ஜனநாத நல்லூர் என வழங்கப் பட்டது; முதலாம் விருபாட்சர் காலத்தில் (கி.பி. 1404) பட்டின நாட்டு ஜனநாத நல்லூர் எனப்பட்டது; இரண்டாம் தேவராயர் காலத்தில் (கி.பி. 1422-1446-இல்) பொன்னூர் நாட்டு ஜனநாத நல்லூர் எனமாறி' விட்டது. இங்ஙனம் ஓர் ஊர் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு வட்டத்தில் சேர்க்கப்படுதல் இன்றும் நடைபெறும் நிகழ்ச்சியேயாகும் அன்றோ ?

## செய்ய வேண்டுவன

இதுகாறும் கூறப்பெற்ற கல்வெட்டுச் சான்றுகள், வாயலூர் ஒருபேரூராக இருந்தது-மூன்று சிவன் கோயில்களையும் ஒரு பெருமாள் கோவிலையும் பெற்றிருந்தது — அதன் கண் பல்லவர், இராஷ்டிர கூடர், சோழர், பாண்டியர், விசய நகர வேந்தர் ஆகிய ஐந்து அரச மரபினர் கல்வெட்டுக்கள் உள்ளன என்பவற்றை மெய்ப்பிக்கின்றன. இவ்வூர் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து பதினைந்தாம் நூற்றாண்டு வரையில் நல்ல நிலையில் இருந்தது என்பதையும் இக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. திருப்பிலவாயிலுடையார் கோவிலில் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே ஈர்க்கும் ஆறுமுகன் உருவச் சிலைபோன்ற சிலைகள் சிலவும் சிற்பவேலைப்பாடு அமைந்த கற்றூண்களும் பாதுகாப்பின்றிக் கிடக்கின்றன. கோவிலுக்குப் பக்கத்திலுள்ள வாழைத் தோட்டம் இக் கோயிலின் திருக்குளமாக விளங்கியது என்று ஊரார் உரைக்கின்றனர்.

"கோவிலில்லாத ஊரில் குடியிருக்க வேண்டா" என்பது தமிழ்ப் பழமொழி கோவில்களைப் புதுப்பித்துச்சமய உணர்ச்சியை மக்களுக்கு ஊட்டுவதில் பேரூக்கம் கொண்டுள்ள சமயத்துறை அமைச்சரும், அறநிலைய ஆணையரும் இக்கோவிலை நேரில் பார்வையிட்டு இதனைப்புதுப்பிக்கும் திருப்பணியில்ஈடுபடுமாறு வேண்டுகின்றேன். வாயலூர்ப் பெருமக்கள் இவ்வதிகாரிகளின் அருள் நோக்கை ஆவலோடு எதிர் பார்க்கின்றனர்.12

11 திருக்கழுக்குன்றத்திற்குக் கிழக்கில் 8 கல் தொலைவிலும் சதுரங்கப் பட்டணத்திற்கு மேற்கில் இரண்டு கல் தொலைவிலுமுள்ள ஆரம்பாக்கமே கல்வெட்டுக் கூறும் அறம்பாக்கம் எனலாம். இதனை எனக்கு அறிவித்தவர் சதுரங்கப் பட்டண ஆசிரியர் மைய சங்கச் செயலாளர் திரு. சுப்பிரமணியம் ஆவார்.

12 வாயலூர்க்கு என்னை இருமுறை அழைத்துச் சென்று இப்பணியில் ஈடுபடுத்தியவர் திருக்கழுக்குன்ற வட்டத்து உதவிக் கல்விக் கண்காணிப் பாளர் திரு. இராம—கலியாணராமன் ஆவார். அவருடனிருந்து உதவியவர்கள் ஆசிரியர் திரு. வீரராகவன், சுப்பிரமணியன், வாயலூர் நிலக்கிழார் திரு. வேதாசலமுதலியார்,வாயலூர் ஆசிரியர்,இராமலிங்கம் முதலியோர் ஆவர். இந் நன்மக்கட்கு எனது நன்றி உரியது. ★

---

## செய்திச் சுருக்கங்கள் :

**சதுர்த்தி விழா :** சென்னை அய்னுவரம் ஐ. சி. எப். கமலவிநாயகர் கோயிலில், 22-8-68 முதல் 29-8-68 வரை, மிகவும் சிறப்புற நடை பெற்றது. ஜெனரல் மானேஜர் திரு. எம். எ. ராவ், டெபுடி சீப் மெக்கானிகல் எஞ்சினீயர் திரு. கே. சந்தானம், திரு. ச. சிவகுமார், M.A., அருட்கவி சேதுராமன் , அறநிலைய ஆணையர் திரு. மா. சே. சாரங்கபாணிமுதலியார், B.A.,B.L., திரு. ந.ரா. முருகவேள், M.A.,M.O.L., சீப் மெகானிகல் எஞ்சினீயர் திரு. ஆர். டி. நாதிர்ஷா, குமாரி கோமதி குழுவினர், உபந்யாச கேசரி கல்லிடைக் குறிச்சி திரு. இராம கிருஷ்ண சாஸ்திரிகள், சங்கீத கலா பூஷணி ஸ்ரீமதி லலிதா குழுவினர் ஆகியோர் கலந்து கொண்டு விழா நிகழ்ச்சிகளைச் சிறப்பித்தனர். பெருந்திரளான மக்கள் விநாயகரைத் தரிசித்து மகிழ்ந்தனர்.

# உற்ற நெறி

வித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார், தருமபுரம்.

யாதொரு பொருளை அடைவதாயினும் அதற்கு நெறி—வழி—வேண்டும். அந்நெறி பல வகையிலும் நன்றானதாய் இருப்பின், அஃது அதற்கு உற்றநெறி-மிகப் பொருத்தமான நெறி யாகும்.

மக்கள் அடையற்பாலனவாய உறுதிப் பொருள்கள், 'அறம், பொருள், இன்பம், வீடு' என்னும் நான்கு திறத்தன. அவற்றுள் வீடே ஏனைய எல்லாவற்றினும் மிக மேலாய பயன். என்னை யெனின், இன்பம் சிறிதுபோது துன்பத்தை மறக்கச் செய்யும்; பொருள் அதனினும் சிறிது மிகுதியாகத் துன்பத்தை அகலப் போக்கும்; அறமும், அதனிற் சிறிது மிகுதியான காலத்திற்கு இன்பத்தினைத் தந்து நிற்கும். வீடுபேறு ஒன்றே எஞ்ஞான்றும் துன்பத்தொடு படாத அழிவற்ற இன்பமாய் நிலைத்திருக்கும்; ஆதலின், அறிவுடையோர் வீடுபேறு ஒன்றையே விரும்புவர். ஆகவே, 'வீடு பேற்றிற்கு உரிய உற்ற நெறி எது?' என்று ஆய்ந்து உணர்தலே உணர்வின் பயன் என்பது விளங்கும். வீட்டு நெறியில் நிற்பவரிடத்து ஏனைய மூன்று பயன்கள் தாமும் உளவாகிவிடும். அத்தகைய உற்றநெறி ஒன்றை—ஒரு பெரியார் உணர்ந்து பற்றி எல்லாப் பயன்களையும் எளிதின் எய்திய வரலாற்றை உணர்தல், ஏனையோர் பலரும் பயன் உறுதற்கு ஏதுவாகும்.

சோழ மண்டலத்தின் உட்பகுதிகள் பலவற்றுள், 'மிழலை நாடு' என்பது ஒன்று. அதனுள் 'பெருமிழலை' என்னும் ஊரின்கண் வாழ்ந்தார் ஒரு பெரியார். நாயன்மார்களுள் ஒருவரான அவர், தமது ஊர்ப்பெயர் காரணமாக, 'பெருமிழலைக் குறும்பர்' என வழங்கப்பெற்றார். 'குறும்பர்' என்பது, பண்டைக் காலத்தில் வேறு சிலரைக் குறித்ததாயினும், பிற்காலத்தில் சிற்றரசரைக் குறிப்பதாயிற்று. எனவே, பெருமிழலைக் குறும்ப நாயனார், அவ்வூர்ச் சிற்றரசர் என்பது பெறப்படும். சேக்கிழாரும்,

"அன்ன தொன்மைத் திருப்பதிக்கண் அதிபர் மிழலைக் குறும்பனார்" என்று அருளினார். ஆகவே, இந் நாயனார் மிழலை நாட்டில் மிக்க செல்வமும், தலைமையும் பெற்றுத் திகழ்ந்தவராதல் தெளிவு.

இத்தகு பெருமை வாய்ந்த இவர் அறிவு நூல்கள் பலவற்றையும் ஆய்ந்து அவற்றின் முடிந்த பொருள் இது என்பதனை அறிந்த பேரறிவு படைத்திருந்தார். அதனால், அறிவினால் பயன்பெறவேண்டி, சிவனடியாரைக் கண்டபொழுது, அவர் தமக்கு வேண்டுவது இன்னது என்று சொல்லுமுன்பே குறிப்பறிந்து அவர்களை எதிர்கொண்டு மகிழ்ச்சியோடு அவரது விருப்பத்தை முடிப்பாராயினார். மற்றும், இவர் தாமே சிவனடியாரைத் தேடிச் சென்று அடைந்து அவர்களை அழைத்து வந்து உணவளித்தார்; பொருள் வேண்டியவர்கட்குப் பொருளை அள்ளிக் கொடுத்தார். அவற்றுடன் சிவபிரானது திருவடி மலர்களைத் தம் உள்ளத் தாமரையில் வைத்துப் போற்றினார்.

காணார் கேளார் கால் முடப்பட்டார் முதலியோர்க்கு உணவும் பொருளும் கொடுத்து உதவாது, சிவனடியார்களுக்கு அவைகளைக் கொடுப்பதனால் யாது பயன் எனச் சிலர் ஐயுறுவர்; அவர் அங்ஙனம் ஐயுறுதல், சிவனடியாராவார் யார் எனவும், அவருக்குக் கொடுப்பதனால் உண்டாகும் பயன் இது; குருடர், ஊமையர், முடவர் முதலியோர்க்குக் கொடுப்பதனால் உண்டாகும் பயன் இது எனவும் உணராமையாலேயாம்.

சிவனடியார்க்கு அவர் வேண்டுவனவற்றைக் கொடுப்போர், குருடர், முடவர் முதலியோர்களைக் கண்டால் அவரிடத்து இரக்கம் கொள்ளார் என்றோ, அவர்கட்கு யாதும் கொடாது ஒழிவர் என்றோ கருதிவிடுதல்கூடாது. ஏனெனில், வறியவர், பிணியாளர் முதலியவர்கட்குக் கொடுத்தலோடு தாம் செய்ய வேண்டிய கடமை முடிந்து விட்டதாகச் சிவபக்தி யுடையோர் கருதுவதில்லை என்பதேயன்றி வேறில்லை. மற்றுச் சிவனடியார்களுக்குத் தம்மால் ஆன

பணிகளைச் செய்தலையே அவர் தமது தலையாய கடனாகக் கருதுவர். அதற்குக் காரணம், வறியவர்களுக்கு உணவு முதலியன கொடுத்தல் அவரது நிலையற்ற உடம்பைச் சிறிது நாள் நிலைபெறுத்துவதோடு ஒழியும்; சிவனடியார்க்குக் கொடுத்தல் என்றும் யாவர்க்கும் நன்றி பயக்கும் உண்மை மெய்ந்நெறியாகிய சிவநெறியைத் தழைக்கச் செய்யும் என்பதே.

எனவே, இரந்து உயிர் வாழ்தலைக் குறிக்கோளாகக் கொண்டு, அதன்பொருட்டு, விபூதி உருத்திராக்கம் முதலிய சிவ சின்னங்களைத் தரித்துக்கொண்டு உலாவுவோரே சிவனடியார் என்று நினையாது உண்மைச் சிவனடியாராவார் யாவர் என உணர்தல் வேண்டும். பூசு நீறுபோல் உள்ளும் புனிதராய், ஆரம் கண்டிகை ஆடையும் கந்தையாகக் கொண்டு, பாரம் ஈசன் பணியலது வேறொன்றைக் கொள்ளாது, நீத்தலும் எம்பிரானுடைய கோயில்புக்குப் புலர்வதன் முன் திருவல கிடுதல், திருமெழுக்கிடுதல், திருநந்தன வனம் வைத்தல், பூப்பறித்துக் கொடுத்தல், பூமாலை புனைதல், புகழ்ந்து பாடுதல் முதலியவற்றுள் இயன்றவற்றைச் செய்து காராண்ட மழைபோலக் கண்ணீர் சோர, சங்கரா சயபோற்றி என்று சொல்லித் தலையாரக் கும்பிட்டுக் கூத்தாடுதல், துஞ்சலும் துஞ்சல் இலாத போழ்தினும் நெஞ்சகம் நைந்து திருவைந்தெழுத்தை நினைதல் முதலிய வற்றிலே தம் நாள் முழுதையும் கழிப்பவர் சிவனடியார் என்பதே பல இடங்களிலும் சொல்லப்பட்டுள்ளது. ஆகவே, அவர்கட்குச் செய்யும் பணியே அங்ஙனம் செய்வார்க்குத் தவமாய் முடிவனவாம். மேற்கூறியவாறு திருத்தொண்டிலேயே நிற்பவர்க்குப் பசி பிணி முதலியன தோன்றுமாயின், அவற்றை நீக்குவோர் யாவர்? திருத்தொண்டரல்லாது உலகியலிலே நிற்பவர்கள் அன்றோ அவைகளை நீக்குதல் வேண்டும்! அதனைக் கருதியே திருவள்ளுவர்,

"துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்
மற்றை யவர்கள் தவம்" [கொல்

என்றார். எனவே, அனைவராலும் இன்றியமையாது செயற்பாலதாகிய திருத்தொண்டினை உலகியல் வாழ்க்கை காரணமாகச் செய்யாது நின்றோர், திருத்தொண்டின் நெறியில் நிற்பவர்க்கு வேண்டுவனவற்றைச் செய்து தமது பிறப்பின் பயனை அடையற்பாலர் என்பது விளங்கும். இதனானே, அறநெறியுள், 'துறவோர்' எனவும், 'இல்வாழ்வோர்' எனவும் சொல்லப்படுவோரே, சிவநெறியுள், 'அடியார்' எனவும், 'அடியார்க் குடியார்' எனவும் சொல்லப்படுகின்றனர் என்பதும் பெறப்படும். ஆகவே, உண்மைச் சிவனடியாராயினர் எத்துணைப் பெருமையுடையர் என்பதனையும், அன்னோர் உலகின்கண் கிடைத்தற்கு எளியரன்றி அரியரே என்பதனையும் நன்கு உணர்தல் வேண்டும்.

மிகவும் அரியாராய சிவனடியார்கட்கு வேண்டுவனவற்றைப் பிறர் செய்தலாலேயே தவநெறியாகிய சிவநெறி உலகில் நிலைபெற்று நிற்கும். அஃது இல்லையெனின், நாளடைவில் சிவநெறி குன்ற, அவநெறியே உலகில் மிகும். சிவநெறியை வளர்த்தல் வேண்டும் என்னும் உணர்வு மெய்யுணர்வின் பகுதியே. அதனால், அதனைச் செயலில் நிகழ்விப்பின், அஃது அவ்வுணர்வை முதிர்வித்து முற்றச் செய்யும். ஏனைய உணர்வுகள் உலகியல் உணர்வுகளேயாகலின், அவைகளைச் செயலில் நிகழ்விப்பின் மேலும் உலக மயக்கத்தினையே வளர்க்கும். அதனால், சிவனடியார்கட்குப் பணிசெய்தல் அனைவர்க்கும் இன்றியமையாததாதல் அறிக.

மேற்கூறியவாறு காணப்படும் உண்மைச் சிவனடியாரையேயன்றி, சிவனடியார் வேடம் மாத்திரமே உடையவரையும் அவ்வேட மாத்திரத்தால் வழிபடல் வேண்டும் எனக் கூறப்படுவது என்னை எனின், அது வழிபடுவோரது பத்திமை நோக்கியே அன்றி, அங்ஙனம் வேட மாத்திரம் உடையாரை அடியவர் என்றல் எவ்விடத்தும் இல்லை. அதனால், அத்தகைய வழிபாடு முல்லைக்குத் தேரும், மயிலுக்குப் போர்வையும் கொடுத்தோரது கொடைமடம் போல்வதாகும். பெற்றம் புலியின் தோல் போர்த்து மேய்வதுபோன்ற வேடமுடையார் நாட்டில் தோன்றுதவாறு அரசன் காத்தல் வேண்டும் என்று திருமூலநாயனார், தமது திருமந்திரத்துள் அருளிச்செய்தார். அத் திருமந்திரம்,

"வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன்
வேட நெறிநிற்போர் வேடம்மெய் வேடமே
வேட நெறிநில்லார் தம்மை விறல்வேந்தன்
வேட நெறிசெய்தால் வீடது வாகுமே"

என்பது. எனவே, சிவநெறியுட் போற்றப் பட்ட அடியார் பணி உண்மைச் சிவனடியார்

பணியேயாம். அதனையே நாயன்மாரும் விரும்பி மேற்கொண்டனர்' பெருமிழலைக் குறும்பரும் அங்ஙனமே செய்து வந்தார்.

அரனடி அன்போடு, அவன் அடியவர் பணியில் மிகுந்து நின்ற பெருமிழலைக் குறும்ப நாயனுர், நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி நாய னரது பெருமைகளையும், அவர் திருவாரூரில் வந்து திருத்தொண்டத் தொகை அருளிச் செய்து அடியார்க்கு அடியவராய் ஆட்பட்டு நின்றமையையும் கேள்வியுற்றார். அதனுல், அவரிடத்து அளவிறந்த அன்புகொண்டு, அவரது திருவடிகளை வழிபடுதலையே நாள் தோறும் செய்யும் நியமமாகக் கருதினர். மால யனுலும் அறிதற்கு அரிய சிவபிரானது திருவடி நிழலை அடைந்து உய்வதற்கு உற்றநெறி, பர வையார் மணுளரது மலரடிகளைக் கையால் தொழுது, வாயால் வாழ்த்தி, மனத்தால் நினை தலே என உணர்ந்து அவைகளை நாடோறும் மிக்க பேரன்புடன் செய்துவந்தார், பெருமிழ லைக் குறும்ப நாயனுர்.

இந்நாயனுர் உணர்ந்தவாறு, ஆளுடைய நம்பிகளது திருவடிப் பற்றையன்றி, உய்தி பெறுதற்கு உற்றநெறி வேறில்லை; என்னை யெனின் உலகியல் வாழ்க்கை காரணமாக இறைபணியில் நிற்கமாட்டாதார், அடியவர் களது பெருமையறிந்து, அவர்கட்கு அடியா ராகி யொழுகல் வேண்டும் என்பது மேலே நன்கு விளக்கப்பட்டது. அவ்வாறு ஒழுகுதற் குத் துணையாக, அடியார்களது பெருமையை உலகிற்கு விளக்கி, அடியார்க்கு அடியராகி நின்ற ஆசிரியர் யார்? வன்றெண்டரே யன்றே; அடியார் பெருமையை அறிய வல் லார்க்கு அவரது திருவடியை அடைதலினும் உற்றநெறி வேறு உண்டாகுமோ!

ஆளுடைய நம்பிகள், அடியார்க்கு அடிய ராகிய அளப்பரும் பெருமை உடைமையினு லன்றே, நம்பியாண்டார் நம்பிகள் தமது திருத் தொண்டர் திருவந்தாதியில் ஏனைய நாயன்மா ரது வரலாறுகளைப்போல ஒரு திருப்பாடல் அல் லது இரண்டு திருப்பாடல்களில் அவரது வர லாற்றைச் சிறிது குறித்துச் செல்லாது நூல் முழுவதுமாக ஆங்காங்குப் பெரிதும் கூறி யரு ளியதும், அம்முறையே சேக்கிழாரும் அவரது வரலாற்றை ஒரு புராணமாக ஓர் இடத்தில் கூறி முடியாது நூல் முழுவதுமாக, தொடக்கம், முடிவு என்னும் இடங்களோடு இடையிடையே பொருந்திவர, தமது திருத்தொண்டர் புராணத் திற்கு அவரையே தலைவராகக்கொண்டு விரித் தோதி முடித்ததும் என்க. நம்பியாரூரர் தாம் அடியார்க்கு அடியராய தன்மையைத் திருத் தொண்டத் தொகையில் மட்டுமன்றிப் பிற இடங்களிலும்,

"நாவின்மிசை யரையன்னெடு தமிழ்ஞானசம் [பந்தன்
யாவர்சிவ னடியார்களுக் கடியானடித் தொண் [டன்"

(திருமுறை 7.78.10.) எனவும்,

"அத்தா ஆலங் காடாஉன் அடியார்க் கடியேனு [வேனே"

என்பது முதலாகவும் அருளிச் செய்தல் காண்க. இங்ஙனமாதலின், திருத்தொண்டர் பலர்க் கும் திருஞானசம்பந்தர் முதலிய ஆசிரியன் மார் சிலர்க்கும் ஆட்செய்தல் நம் மனோர்க்குப் பொதுவாக உரித்தாயினும், நம்பியாரூரர் திரு வடிக்கு ஆட்செய்தல் சிறப்பாக உரித்து என்க. அன்றியும், திருத்தொண்டர் பலர்க்கும் ஆட் செய்து பெறும் பயன்கள் அனைத்தும், ஆரூரர் திருவடிகட்கு ஆட்செய்தலால் வருவனவாம். அதனையே இப் பெருமிழலைக் குறும்பர் வரலாற் றில் இனிவரும் பகுதிகள் நன்கு உணர்த்தும். நம்பியாண்டார் நம்பிகளும், சேக்கிழாரும் ஆகிய முன்னை ஆசிரியர்பற்றி நின்ற நெறியும் அதுவே என்பது மேலெல்லாங் கூறியவாற்றுல் விளங்கும்.

நம்பியாரூரது நற்றுள்களை நாள்தோறும் வழிபட்டு அவரது நாமத்தையே ஓதிவந்த சிறப் பினுல் பெருமிழலைக் குறும்பநாயனுர் அதியற் புதப் பயன்கள் பலவற்றை அடைந்தார். அரி தில் முயன்று கைவரப் பெறும் யோகப்பயிற்சி அவருக்குத் தானே கைவந்து நின்றது. யோக நெறியால் அடையற் பாலனவாகிய அணிமாதி அட்டமா சித்திகளும் வாய்த்தன. இச் சித்தி களில் ஒன்றிரண்டைப் பெறுதற்கே யோகியர் எத்துணையோ அரும்பாடு படுவர். ஆனுல், அனைத்துச் சித்திகளும் தாமே பெருமிழலைக் குறும்பர்பால் வந்து நின்றன. அணிமாதி அட் டமா சித்திகளைப் பெற்றோர்க்குக் கூடாதது மண்ணுலகிலும், விண்ணுலகிலும் யாதொன் றும் இல்லை. இவை அனைத்தையும் ஆலால

சுந்தரரது அடிமலர் வழிபாடு ஒன்றே அளித்தது.

பெருமிழலைக் குறும்பரைப்போல வன்றெண்டரை வணங்கிப் பேறுபெற்ற நாயன்மார் மற்றும் இருவர் உளர்; அவர்கள் சோமாசி மாறரும், சேரமான் பெருமாளும் ஆவர். இவர்களிடத்து உள்ள ஒரு வியப்பு யாதெனில் இவர்களை நம்பியாரூரர் முன்பே திருத்தொண்டத் தொகையுள் எடுத்தோதி இவர்கட்கு அடியாராகி நின்றார்: ஆயினும், அவரையே இவர்கள் பின்பு தமக்குத் தலைவராகக் கொண்டு ஒழுகினர். இந்நிலை சிவனடியாரிடமே காணப்படுவதொன்றாகும். அஃதாவது, ஒருவர் மற்றவரை உண்மையிலே பெரியாராக மதித்து அவருக்குப் பணிந்து ஒழுகவும், அங்ஙனம் மதிக்கப்பட்டவர் தம்மைத் தாம் பெரியவராக நினையாது, தம்மைப் பெரியவராக மதித்தவரையே தாம் பெரியவராக மதித்து அவருக்குப் பணிந்து ஒழுகும் தன்மை சிவனடியாரிடம் காணப்படுகின்றது. இதனை அப்பர் அப்பூதியடிகள் சந்திப்பிலும் காணலாம். இன்னும் நாவுக்கரசர், சீர்காழியிற் சென்ற பொழுது ஞானசம்பந்தர் அவரை நன்கு வரவேற்று, 'அப்பரே,' என்று அழைக்கவும், நாவுக்கரசர், அவரைப் 'பிள்ளையீர்' என்று அழையாது, 'அடியேன்' என்று வணங்கிய இடத்திலும் இந்நிலையே காணப்படுகின்றது. இந்த ஓர் அரும்பெறல் தன்மையைச் சேக்கிழார் தமது திருத்தொண்டர் புராணத்து நாட்டுச் சிறப்பிலேயே,

"பத்தியின் பாலராகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமிற் கூடினர்கள் தலையினால் வணங்கு மா [போல்
மொய்த்தநீள் பத்தியின்பால் முதிர்தலை வணங்கி [மற்றவ்
வித்தகர் தன்மைபோல விளைந்தன சாலி [யெல்லாம்"

வயல்களில் நெற்பயிர்கள் கதிர்முற்றித் தலை சாயும்பொழுது, சில பயிர்கள் மட்டும் தலை சாய்தல் இல்லை; எல்லாப் பயிர்களுமே ஒருங்கு தலை சாய்ந்து நிற்கும். இக்காட்சி சிவனடியார் திருக்கூட்டம் எதிர்ப்படுங்காலத்து, வணங்கினோர் யாவர்? வணங்கப்பட்டோர் யாவர்?' என்னும் ஆய்வுக்கு இடம் இன்றி, அனைவருமே வணங்கி நிற்கும் காட்சியை நினைப்பிக்கின்றது என்கிறார் சேக்கிழார். இதனுள், 'பத்தி' என்னும் சொல்லை, 'அன்பு, வரிசை' என்னும் இருபொருள்களில் அமைத்து, இலக்கியச் சுவை ததும்ப, ஓர் உண்மையைப் புலப்படுத்திப் போந்தமை, அருட்புலமை வாய்ந்த சேக்கிழார் ஒருவருக்கே உரித்தாய் நிற்கின்றது.

நம்பியாரூரரது திருப்பெயரையே மந்திரமாகக்கொண்டு ஓதி வந்தமையால் பெருமிழலைக் குறும்பர் அணிமாதி அட்டமா சித்திகளைப் பெற்றது மட்டும் அன்று; யார்க்கும் ஞான மெய்ந்நெறியாகிய திருவைந்தெழுத்தின் உண்மையெல்லாம் இனிது விளங்கப்பெற்று அஃது ஒன்றையே பற்றாக உணர்ந்து அதன்கண் உறைத்து நிற்கும் உயர்நிலையும் வாய்த்தது. இதனைச் சேக்கிழார்,

"நாளும் நம்பி யாரூரர் நாமம் பயின்ற நலத் [தாலே
ஆளும் படியால் அணிமாதி சித்தியான அணைந்த [தற்பின்
மூளும் காத லுடன்பெருக முதல்வர் நாமத் [தெழுத்தஞ்சும்
கேளும் பொருளும் உணர்வுமாம் பரிசு வாய்ப்பக் [கெழுமினர்"

என்று அருளினர்.

முடிவாகச் சுந்தரமூர்த்தி நாயனர், மலைநாட்டில் கொடுங்கோளூரில் சேரமான் பெருமாள் நாயனருடன் இருந்து அஞ்சைக்களத்து அப்பரை வணங்கிவரும் நாட்களில் 'நாளை அவர் திருக்கைலைக்குச் செல்கின்றார்' என்று முன்னளே பெருமிழலைக் குறும்பர் தமது யோகக் காட்சியில் உணர்ந்தார். சுந்தரருக்கே அது தெரியாததாம். அதனை அவருக்கு முன்னே உணர்ந்தார் பெருமிழலைக் குறும்பர்.

"கண்ணிற்கரிய மணிகழிய வாழ்வார்போல வாழேன்", என்று எண்ணி 'அவருக்கு முன்பே அடியேன் இவ்வுலகை நீத்து எம்பிரானிடம் செல்வேன்' என்று நினைந்து, யோக முயற்சியால், பிராண வாயுவை நடு நாடி வழியாகச் செலுத்தித் தலையில் உள்ள பெருவழியை (பிரமரந்திரத்தை)த் திறந்து வெளிப் போந்து, முன்னளே திருக்கைலையை அடைந்தார்.

ஆசிரியர் இறைவனை அடையும் நிகழ்ச்சியை அது நிகழ்தற்கு முன்பே உணர்தலும், உணர்ந்து அவருக்குமுன்பே தாம் இறைவனை அடைதலும் பிறவுமாகிய பேறுகளெல்லாம் பெருமிழலைக் குறும்பர்க்கு எவ்வாறு வாய்த்தன? அவர் கொண்ட ஆசாரிய பக்தியினலேயன்றே! எனவே, பெருமிழலைக் குறும்பர் உற்ற நெறியாக உணர்ந்து பற்றிய நெறி, உற்ற நெறியே ஆயிற்றன்றே! இவைகளை யெல்லாம் அறிய ஆயிரம் ஓதினும், நம் ஆசிரியன்மார் தம் அளப்பரும் பெருமை நம்மனேர்தம் மனத்துப் புகுமோ? புகுந்து அவர் தம் திருவடியையே உற்ற நெறியாகப் பற்றி உய்தி பெறுதலைப் பெருமிழலைக் குறும்பரை வணங்கிப் பெறுவோமாக!

# சொக்கேசர் திருவிளையாடல்

பாலகவி வயிநாகரம் திரு. வே. இராமநாதன் செட்டியார்,
தேவகோட்டை.

வையை நதி பாய்வதால் வளம்பெற்ற பாண்டிநாட்டின் தலைநகராய்ச் சிவராசதானி யென்று புகழப்பெறும் மதுரை மாநகரில் கோயில்கொண்டிருக்கும் சொக்கேசர், அடியாரை ஆட்கொள்வதற்காகப் புரிந்த திருவிளையாடல் அறுபத்து நான்காகும். அவற்றை இங்கே சுருக்கமாக உரைப்போம்.

1. மதுரை நகரம் உண்டாவதற்கு முன், அந்த இடத்தில் இருந்தது கடம்பவனம் என்ற காடு. விருத்திராசுரனைக் கொன்றதனால் வந்த பாவம் நீங்குவதற்காகத் தேவேந்திரன் இக் காட்டிற்கு வந்து, பொற்றாமரையில் மூழ்கிப் பொன் விமானம் அமைத்துச் சொக்கேசரைப் பூசைசெய்ய அவனுக்கு அருள் செய்தார்.

2. துருவாச மாமுனிவர் தேவேந்திரனுக்கு அளித்த மலரைத் தன் காலாற் சிதைத்த வெள்ளை யானை, அம்முனிவரது சாபத்தில் பூவுலகில் நெடுநாள் காட்டானையாகத் திரிந்து, பின் கடம்பவனத்தில் பூசிக்க, அதன் சாபத்தைத் தீர்த்தருளினார்.

3. தனஞ்சயன் என்னும் வணிகன் கடம்பவனத்தில் கண்ட சிவலிங்கத் திருமேனிக் காட்சியைப் பாண்டியனுக்குச் சொல்ல, அன்றிரவு சிவபெருமான் பாண்டியனின் கனவில் சித்தராய்த் தோன்றி வணிகன் கூறியதற்கு ஏற்ப அந்த இடத்தில் காட்டையழித்துத் தலைநகரம் உண்டாக்க ஆணையிட்டார். அதுவே மதுரை என்று வழங்குகின்றது.

4. மலையத்துவச பாண்டியனும் அவன் மனைவி காஞ்சனமாலையும், செய்த தவத்தின் பயனாய், மீனாட்சியம்மை அவர்களின் மகளாய்த் தோன்றித் தடாதகைப் பிராட்டி என்னும் பெயருடன், மதுரையிலிருந்து உலகாண்டார்.

5. தடாதகைப் பிராட்டியார் திக்கு விஜயம் செய்து உலகனைத்தையும் தன் அடிப்படுத்திக் கைலைக்கும் சென்று சொக்கேசரைக் கண்டு காதல்கொண்டார். சொக்கேசர் மதுரைக்கு வந்து அவரை மணந்து சுந்தர பாண்டியராய் அங்கிருந்து உலகாட்சி புரிந்தருளினார்.

6. சொக்கேசரின் திருமணம் காணவந்த பதஞ்சலி முனிவரும், வியாக்கிரபாத முனிவரும் அவரது திருக்கூத்தைக் காணவிரும்பி வேண்ட மதுரை வெள்ளிமன்றில் ஆடியருளினார்.

7. திருமணத்தின் செலவுபோக மிஞ்சியிருந்த சோறு முதலியவற்றை உண்ணுதற்கு வேண்டும் பசியைக் குண்டோதரனுக்கு அளித்தார்.

8. மலைபோல் குவிந்திருந்த சோற்றை உண்டும் பசி தீராத குண்டோதரனுக்காக எடுக்க எடுக்கக் குறையாத அன்னக் குழிகள் அமைத்துப் பின், அவன் நீர் வேட்கையால் வருந்த, வையைநதியில் நீர்ப் பெருக்கை வரவழைத்தார்.

9. தடாதகைப் பிராட்டியின் அம்மை காஞ்சனமாலை கணவன் பொன்னுலகை அடைந்த பிறகு கடலாட விரும்ப, மதுரையில் ஏழு கடல்களையும் வரவழைத்தார்.

10. தேவலோகத்தில் இந்திரனோடு வீற்றிருந்த மலையத்துவச பாண்டியனைக் காஞ்சன மாலையோடு கடலாடுவதற்காக அழைத்தார்.

11. தடாதகைப்பிராட்டியின் திருவயிற்றில் முருகப் பெருமானை உக்கிர குமார பாண்டியனாக அவதரிக்கும்படி செய்தருளினார்.

12. உக்கிர குமாரருக்குச் சோழன் மகள் காந்திமதியை மணம் செய்வித்து வேல், வளை, செண்டு கொடுத்து முடியும் சூட்டினர்.

13. இந்திரனின் தூண்டுதலால் வருணன் தன் ஏழு கடல்களையும் மதுரையை அழிக்கும் படி ஏவ, உக்கிர குமாரர் கோபமுற்று அவை வற்றும்படி வேலை எறிந்து உலகத்தைக் காத்தார்.

14. இந்திரனுக்கும், உக்கிரகுமாரருக்கும் போர் மூண்டது. அப்போரில் தன் சக்கரத்தால் இந்திரனின் முடியைச் சாய்த்துத் தள்ளினர் உக்கிரகுமாரர். இந்திரன் வலியற்று ஓடினன்.

15. பருவ மழை பெய்யாமல் பாண்டி நாடு பசியால் வருந்த, உக்கிரகுமாரர் மேரு மலைக்குச் சென்று, செண்டால் அதை எறித்து, அதன் செருக்குத் தீர்த்து, அங்கிருந்த பெருநதிகளைக் கொண்டுவந்து மக்கள் பசி தீர்த்தார்.

16. மதுரையில் அந்தணர்க்கு நால் வேதப் பொருளை விரித்துரைத்தருளினர் சொக்கேசர்.

17. பாண்டியன் முடியில் பதிப்பதற்கான மாணிக்கங்களை, வணிகராக வந்து மதுரை வீதிகளில் நடந்து விற்றருளினர் சொக்கேசர்.

18. மதுரையை அழிக்க வருணன் விட்ட கடல்களைப் பருகும்படி தன்னுடைய நான்கு மேகங்களையும் ஏவினர்.

19. தோல்வியுற்ற வருணன், தன் ஏழு மேகங்களையும் ஏவிப் பெருமழை பொழிந்து மதுரையை அழிக்கத் தொடங்கினன். சொக்கேசர் தன் நான்கு மேகங்களும் நான்கு மாடங்கள் போல் மதுரையைச் சூழ்ந்திருந்து காக்கச் செய்தார். அன்றிலிருந்து மதுரை "நான்மாடக் கூடல்" என்று வழங்குகிறது.

20. சித்தர் உருவங்கொண்டு மதுரையில் பல அதிசயங்கள் செய்தருளினர்.

21. மன்னவன் கையிலிருந்த கரும்பைக் கல்லானைக்கு ஊட்டினர்.

22. பாண்டியனைக் கொல்லுவதற்குச் சமணர்கள் விடுத்த யானையைத் தன் நரசிங்க பாணத்தால் கொன்று, அவனைக் காத்தார்.

23. மாமன் மாமியால் துன்புற்ற கௌரி யென்னும் அந்தணப் பெண்ணிற்கு அருள்செய்வதற்காகக் கிழவராகவும், குமரராகவும், குழந்தையாகவும் மாறி ஆட்கொண்டார்.

24. எந்நாளும் இடதுகாலைத் தூக்கியாடிஞல், அது நோகுமே என்று வருந்திய அன்புடைப் பாண்டியனுக்காக மதுரை வெள்ளி மன்றத்தில் கால் மாறி வலது கால் தூக்கியாடினர்.

25. வழிப்பயணம் சென்ற அந்தணத் தம்பதிகள் இருவரில், மனைவியைப் பலகாலமாக ஒரு மரத்தில் தொங்கியிருந்த அம்பு காற்ருல் தள்ளப்பட்டுப் பாய்ந்து கொல்ல, மற்ருெரு பக்கத்தில் வில்லும் கையுமாகக் குறிபார்த்திருந்த ஒரு நிரபராதியான வேடனை அந்தணன் பிடித்துப் பாண்டியனைக் கொண்டு சிறையிலடைப்பித்தான். சொக்கேசர், பாண்டியனையும் அந்தணனையும் வணிகனொருவன் வீட்டில் நடந்த திருமணத்திற்கு வரவழைத்து, மணமகன் உயிரைக்கொண்டுபோக வந்திருந்த யமதூதர் இருவருடைய பேச்சையும் கேட்பித்தார். அந்தப் பேச்சின் மூலம் பார்ப்பனியைக் கொன்றது விதியே, வேடனல்லன் என்றறிந்தனர் பாண்டியனும் அந்தணரும். வேடன் மேல்வந்த பழி நீங்கியது.

26. பெற்ற தாயைப் புணர்ந்து, தந்தையைக் கொன்ற அந்தணன் ஒருவனின் மாபாதகத்தை, அவன் கோபுரம் கண்டு கும்பிட்ட காரணத்தால் நீக்கியருளினர்.

27. தனக்கு வாள்வித்தை கற்றுத்தந்த ஆசிரியனின் மனைவிமேல் ஆசைவைத்த சித்தன் என்ற மாணவனை, அந்த ஆசிரியன் உருவத்தில் வந்து போருக்கழைத்துக் கொன்ருர்.

28. சமணர்கள் யாகம் செய்து பாண்டியனைக் கொல்ல விடுத்த கொடிய விடப் பாம்பைக் கொன்ருர்.

29. தாங்கள் விட்ட யானையும் பாம்பும் சாகக்கண்ட சமணர்கள் மேலும் ஒரு மாயப் பசுவை ஏவ, அதைத் தன் இடபத்தால் கொல்லுவித்தார்.

30. பாண்டியனின் மந்திரி சவுந்தர சாமந்தன் என்பவன் படைவீரரைச் சேர்ப்பதற்காக மன்னன் தந்த பொருளைச் சிவ கைங்கரியத்தில் செலவிட்டுச் சொக்கேசரை வேண்ட, அவர் தன் பூதகணங்களைப் படைவீரராக்கிப் பாண்டியனுக்கு மெய்க்காட்டிட்டுக் காட்டி மறைந்தார். அடியார் பெருமையை அறிந்தான் மன்னவன்.

31. அந்தணர் வேள்விகளை அலட்சியம் செய்தான் பாண்டியன். பருவமழை பெய்யாது

நின்றது. பஞ்சம் தலைவிரித்தாடியது. இக்குறையை நீக்கச் சொக்கேசர் எடுக்க எடுக்கக் குறையாத பொன்நிறைந்த முடிப்பொன்றைப் பாண்டியனுக்களித்து வேள்வி இயற்றச் செய்து பஞ்சத்தை நீக்கியருளினர்.

32. இறைவனிடத்தில் காதல் கொண்ட தம்மனைவியரை மதுரையில் வணிக மகளிராகப் பிறக்கும்படி சபித்தனர் தாருகவனத்து முனிவர்கள். சொக்கேசர் மதுரை வீதிகளில் வளையல் விற்று, அந்த மகளிர்க்கு வளையலிட்டு, அவர்கள் காதலை அதிகப்படுத்தினர்.

33. இயக்க மாதர் அறுவருக்கு அட்டமாசித்தி அருளிச் செய்தார்.

34. பாண்டியனுக்குப் பகைவனாய்க் காஞ்சிபுரத்தில் ஆண்ட காடுவெட்டிச் சோழன், வெள்ளிமன்றத் திருநடனம் காண விரும்பச் சொக்கேசர் அவனை மாறுவேடத்தோடு இரவில் வரச் செய்து தரிசனம் கொடுத்து, முன் பூட்டியிருந்த கதவுக்கு இடபஇலச்சினை வைத்தருளினர்.

35. பாண்டியனின் தம்பி செய்த சூழ்ச்சியால் சோழனுக்கும் பாண்டியனுக்கும் போர் மூண்டது. அப்போர்க்களத்தில் பாண்டிய வீரர்க்குத் தண்ணீர்ப் பந்தல் வைத்துத் தாகம் தீர்த்தருளினர். தாகம் மிகுந்து வருந்திய சோழன் படைகள் தோல்வியுற்று ஓடின.

36. திருப்பூவணத்தில் வாழ்ந்த பொன்னனையாள் சொக்கேசரின் திருவுருவத்தைப் பொன்னினல் செய்ய விருப்பங் கொண்டாள். தனக்கு வரும் பொருளையெல்லாம் சிவனடியார் பூசைக்குச் செலவிட்டுப் பொருளுக்கு வழியின்றித் தவித்த அவளிடத்தில் சொக்கேசர் சித்தராய்ச் சென்று, இரசவாதம் செய்து பொன் கொடுத்தருளினர்.

37. சோழனுக்கும் பாண்டியனுக்கும் நடந்த போரில், சொக்கேசர் வேட்டுவ வடிவத்தோடு பாண்டியன் சேனைக்கு உதவிபுரிய, அதுகண்ட சோழன்படை அஞ்சியோடப் பாண்டியன் சேனை அதைத் துரத்திச் சென்று மடுவில் வீழ்த்தியது.

38. சிவனடியார் பூசை செய்து வாழ்ந்த நல்லான் என்ற உழவன் வறுமையால்வாட அவனுக்கு என்றும் குறையாத நெற்கோட்டையைக் கொடுத்தார்.

39. வணிக மைந்தன் ஒருவனுக்கு மாமனுக வந்து நீதிமன்றத்தில் வழக்குரைத்து, அவனுக்குரிய தாயபாகச் சொத்துக்களைப் பங்காளிகளிடமிருந்து வாங்கிக் கொடுந்தார்.

40. வர குண பாண்டியனுக்கு வந்த பழியைத் தீர்த்து மதுரையில் சிவலோகத்தைக் காட்டியருளினர்.

41. பாணபத்திரன் என்பான் சிவனடி மறவாத யாழ்ப்பாணன். அவனுக்குப் போட்டியாக வந்த ஏமநாதனைத் துரத்துவதற்காகச் சொக்கேசர் விறகு விற்பவராகச் சென்று, அவன் வீட்டு முகப்பில் அமர்ந்து யாழ் வாசித்து, தான் பாணபத்திரனின் அடிமையென்று சொல்லி, ஏமநாதனை அஞ்சி ஓடும்படி செய்தார்.

42. பாணபத்திரனிடம் சேர்மான் பெருமானுக்கு ஒரு திருமுகம் கொடுத்து, ஏராளமான செல்வத்தைப் பெறுமாறு செய்தார்.

43. முப்பொழுதும் தவருது கோயில் சென்று இசைப்பணி செய்யும் பாணபத்திரன், ஒரு நாள் பெருமழையில் நின்று யாழ் வாசிக்க அவனுக்கிரங்கிப் பொற்பலகையிட்டு, அதன் மேல் நின்று பணிசெய்யுமாறு அருளினர்.

44 கற்பில் மிகுந்த பாணபத்திரனின் மனைவியோடு இசைப் போட்டியிட்ட பாடினியைத் தோல்வியுறச் செய்தார்.

45. தாயில்லாமல் ஏங்கி வெய்யிலில் வருந்திய பன்னிரண்டு பன்றிக் குட்டிகளுக்குத் தாயாகி வந்து பால் கொடுத்தருளினர்.

46. அந்தப் பன்றிக் குட்டிகளை மந்திரிகளாக்கிப் பாண்டியனுக்கு அளித்தார்.

47. முற்பிறப்பில் நிறைந்த புண்ணியமும் சிறிது பாவமும் செய்ததால் கரிக்குருவியாகப் பிறந்த பறவைக்கு உபதேசம் செய்து வலிமையளித்து அதன் இனமெல்லாம் வலிவோடு வாழ அருள் செய்தார்.

48. நாள்தோறும் பக்தியினல் மனங்கனிந்து பூசித்த நாரையொன்றிற்கு முத்தி கொடுத்து, அதன் வேண்டுகோளின்படி பொற்றாமரையில் என்றுமே நீர்வாழ் பிராணிகள் இல்லாதிருக்க அருள் செய்தார்.

49. தன்மே லணிந்த பாம்பை மதுரையைச் சுற்றி வளையச் செய்து அதன் எல்லையைப் பாண்டியனுக்கு வரையறுத்துக் காட்டி

ணர். அன்றிலிருந்து மதுரை "ஆலவாய்" என்று வழங்குகிறது.

50. பாண்டியனுக்கும் சோழனுக்கும் மூண்ட போரில், பாண்டியன் சேனைக்குத் தலைவனாக வந்து, "சுந்தரம்" என்னும் பெயருடைய அம்புகளை எய்து, சோழன் சேனை தோற்றோடச் செய்தார்.

51. புலவர்களின் புலமையை அளந்து காட்டும் பொற்பலகையை மதுரைத் தமிழ்ச் சங்கத்துக்கு அளித்தார்.

52. தன் மனைவியின் கூந்தலிலிருந்து வந்த மணத்தைப்பற்றி ஐயமுற்ற பாண்டியனிடத்தில், தருமி என்ற ஏழையந்தணன் மூலம் ஒரு பாட்டு எழுதியனுப்பி, மன்னனின் சந்தேகத்தைத் தீர்த்து, அவன் கட்டிவைத்த பொன்முடிப்பைத் தருமி பெறுமாறு செய்தார்.

53. அந்தப் பாட்டின் பொருள் குற்றம் உடையது என்று வாதம் செய்த நக்கீரனுக்குச் சொக்கேசர் தன்நெற்றிக் கண்ணைக் காட்ட, அவன் அதன் வெப்பந் தாங்காமல் பொற்றாமரையில் வீழ்ந்தான். அவனுக்கு இரங்கிக் கரையேற்றியருளினார்.

54. அகத்திய முனிவரைக் கொண்டு நக்கீரனுக்கு இலக்கணம் உபதேசித்தார்.

55. சங்கப் புலவர்களிடையில் ஏற்பட்ட சண்டையை ஊமை வணிகன் உருத்திர சன்மனைக் கொண்டு தீர்த்து, அவர்களில் கீரனும், கபிலனும், பரணனுமே சிறந்தவர்கள் என்று நிறுவினார்.

56. பாண்டியனிடத்தில் தன் புலமையைக் காட்டிப் பரிசு பெற வந்தான் இடைக்காடன் என்ற புலவன். பாண்டியன் அவனை மதிக்கவில்லை. கோபமுற்ற இடைக்காடன் சொக்கேசரிடம் முறையிட்டு மதுரையை விட்டுச் செல்லச் சொக்கேசரும் அவன் பின்னாலேயே சென்று வைகையின் அக்கரையில் எழுந்தருளினார். பின் மன்னன் வேண்ட, இடைக்காடனைப் பெருமைப் படுத்தும்படி செய்து பின்னர் மதுரைக்கு எழுந்தருளினார்.

57. வலைஞர் மகளாக வந்திருந்த பார்வதியை மணம் புரிவதற்கு, முன்னைச் சாபத்தில் சுறுமீனாகிப் பலநாட்களாக வலைக்கு அகப்படாது தப்பி வாழ்ந்திருந்த நந்தியை வலை வீசிப் பிடித்தார்.

58. திருவாதவூரர் என்ற மாணிக்கவாசகருக்குத் திருப்பெருந்துறையில் காட்சி கொடுத்து உபதேசம் செய்தருளினார்.

59. குதிரை வாங்குவதற்காகப் பாண்டியன் தந்த பொருளைக் கோயில் திருப்பணியில் செலவிட்ட மாணிக்கவாசகருக்காகச் சொக்கேசர் நரிகளைக் குதிரைகளாக்கிப் பாண்டியனுக்கு அளித்தார்.

60. அன்றிரவே அவற்றை மீண்டும் நரிகளாக்கினார். கோபமுற்ற பாண்டியன் மாணிக்கவாசகரைத் துன்புறுத்தினான். சொக்கேசர் வைகை நதியைப் பெருகவிட்டார்.

61. வெள்ளத்திற்குக் கரைகட்ட மக்களை ஏவினான் மன்னன். தன் பங்கை அடைக்க மகன் இல்லாது வருந்தினாள் வந்தி என்ற ஒரு கிழவி. அவளிடத்தில் பிட்டு வாங்கி உண்டு அவளுக்காக மண் சுமந்து கரை அடைப்பவர் போல் விளையாடி மன்னன் கையால் பிரம்படி பட்டார் சொக்கேசர். அந்த அடி உலகமெல்லாம்பட்டது. அடியார் பெருமையை அறிந்த பாண்டியன் மாணிக்கவாசகரை விடுவித்தான்.

62. சமணரான பாண்டியனின் வெப்பு நோயையும், கூனையும், அவன் மனைவி மங்கையர்க்கரசியாரின் வேண்டுகோளின்படி திருஞான சம்பந்தப் பெருமானைக் கொண்டு தீர்ப்பித்தார்.

63. சமணர்க்கும் சம்பந்தர்க்கும் நிகழ்ந்த அனல்வாதம், புனல் வாதங்களில் சம்பந்தரின் பாட்டு எழுதிய ஏடு வேவாமலும், நீரில் எதிரேறியும் வென்றது. சமணர்கள் தோற்றுக் கழுமரம் ஏறினர்.

64. வணிகப் பெண் ஒருத்தி தன் மாமன் மகனைத் திருப்புறம்பயத்தில் திருஞான சம்பந்தர் திருமுன்பில் மணந்ததற்குச் சாட்சியாக அங்கிருந்த வன்னி மரமும் கிணறும், இலிங்கமும் மதுரைக் கோயிலில் வந்திருக்கச் செய்து, மூத்தாளின் பகையைத் தீர்த்தருளினார்.

இந்த அறுபத்து நான்கு திருவிளையாடல்களையும் அகத்திய முனிவர் சொல்லக் கேட்ட மற்ற முனிவர்கள் சொக்கேசரை மலர் தூவி அருச்சித்தார்கள். நாமும் அவரை வழிபட்டு நலம் பெறுவோமாக.

# சிவஞானபோதம்

திரு. க. வச்சிரவேல் முதலியார் பி.எ., எல்.டி. காஞ்சிபுரம்.

(முன் இதழ்த் தொடர்ச்சி)

## எட்டாஞ் சூத்திரம் இரண்டாம் அதிகரணம்

1. சூத்திரக்கூறு: "தம்முதல் குருவுமாய்" உயிர்களின் உணர்வுக்கு முதல் எனப்பட்ட இறைவனே உலகின்கண் ஞானாசிரியனாயும் வெளிப்பட்டுப் பக்குவான்மாக்களுக்கு உணர்த்துவன் என்பது கருத்து.

2. வார்த்திகம்: "இனி இவ்வான்மாக்களுக்குத்தமது முதல்தானே குருவுமாய் உணர்த்தும் என்றது, அவன் அன்னியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்".

மேலே சரியை கிரியாயோகம் எனப்படும் தவநெறியில் நின்றார்க்கே வீடுபயக்கும் உணர்வு விளங்கும் எனப்பட்டது. அத்தவ முதிர்ச்சி உடைய பக்குவான்மாக்களுக்கு உயிர்க்குயிராய் நின்று உணர்த்திவரும் முதல்வனே குருவாய்த் தோன்றிச் சிவஞானத்தைத் தோற்றுவிப்பன் என்பது இங்கே கூறப்படுகின்றது. முதல்வனுக்குப் பிறப்பில்லை என்பது சைவர் கொள்கை ஆதலின், அவன் குருவாய் வந்து நின்று உணர்த்துவான் என்றல் எவ்வாறு பொருந்தும் எனின், விடை கூறப்படுகிறது. முதல்வன் 'அங்கிங்கு எனாதபடி எங்கும் அருளோடு நிறைந்து உளன்' எனப்படினும், அவன் சீவன்முத்தர் தவிர ஏனைய உயிர்களிடத்துப் பாலில் நெய் போல மறைந்தே நிற்பன்; ஆனால், மாசு நீங்கிய உணர்வினராகிய சுத்தான்மாக்களிடத்துத் தயிரில் நெய் போல விளங்கி நிற்பன். ஆதலால், சுத்தான்ம சைதன்னியமே தானாக, அவர்தம் உடம்பே தனது அருட்டிருமேனியாக ஆவேசித்து நின்று உணர்த்துவன். சுத்தான்மாக்களாவார் சமயகுரவரும், மெய்கண்ட முதல்வரும் போல்வார் எனக் கொள்க.

3. இவ்வதிகரணப் பொருள்பற்றி வந்துள்ள ஒப்புமைப் பகுதிகளுட் சில:—

(i) அகந்துறுநோய்க்(கு) உள்ளினரை
அன்றி அதனைச்
சகத்தவரும் காண்பரோ தான்

—திருவருட்பயன்—42

(ii) ஆகமங்கள் எங்கே? அறு சமயந்
தானெங்கே?
யோகங்கள் எங்கே? உணர்வெங்கே?—
பாகத்(து)
அருள்வடிவுந் தானுமாய் ஆண்டிலனேல், அந்தப்
பெருவடிவை யார் அறிவார் பேசு

—திருக்களிற்றுப் பாடியார், 5

(iii) "நானும்என் சிந்தையும் நாயகனுக்
கெவ்விடத்தோம்?
தானுந்தன் தையலும் தாழ்சடையோன்
ஆண்டிலனேல்

—திருவாசகம், திருக்கோத்தும்பி.

4. (அ) இங்குத் தன்னாற் கூறப்படும் பொருள்:—

பக்குவான்மாக்களுக்குச் சற்குருவாய் வந்து மெய்யுணர்வு தருவான் சிவபிரானே.

(ஆ) ஐயப்பாடு:—மெய்யுணர்வு அளிப்பான் முதல்வனோ, பிறரோ? ஒருவன் தானேயும் கற்று ஈண்டு மெய்ப் பொருளைத் தலைப்படுதல் கூடுமன்றோ? முதல்வனே குரு எனப்படினும் அஃது உண்மை என்றற்குச் சான்று யாது, உபசாரமாகலாம் அன்றோ?—என இங்

னம் பலதலைப்பட்டுத் துணிவு பிறவாது நிற்றல்.

(இ) பிறர்கூறும் பக்கம் :—

(i) "விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்பு மலர்காய் கனிபோல் அன்றே பராபரமே"

என்ப. ஆதலால், அரும்பு மலராயும் அது காயாகியும் அது கனியாகவும் வளர்ச்சியுறுமாறு போல, சரியை முதலியவை முறையே தாமே வளரும் வளர்ச்சி நிலைகள் ஆகும். ஞானத்தை உணர்த்துதற்குச் சற்குரு வேண்டுவதில்லை; இக்கருத்துப் பற்றியே திருவள்ளுவனாரும் சற்குரவனை வலியுறுத்தாமல் ஞான நூற்கல்வி ஒன்றனையே பொருளாகக் கொண்டு "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப் படுவர்—மற்றீண்டு வாரா நெறி" என்பார் ஆயினர்—இங்ஙனம் கூறுவோர் சமயநெறி வராதவர்.

(ii) இனி, குரவன் ஒருவன் வேண்டினும் அவன் நம்மனோரின் ஒருவனே ஆதல் அமையும். முதல்வனே குரவனாக வருதல் வேண்டும் எனக் கொள்ள வேண்டுவதில்லை; சற்குரவனின்றி ஞானம் உணர்ந்த பெரியோர்களை யாம் கண்டு வருகின்றோம்.—இங்ஙனம் கூறுவோர் நையாயிகரும் சாங்கியரும் முதலாயினோர்.

(iii) பிறப்பில் பெருமான் மாயாகாரிய உருவைத் தாங்கான் ஆகலின், முதல்வன் உலகத்து ஆசாரியன் ஒருவனை இடங்கொண்டு உணர்த்துவன் என உபசாரமாகக் கூறுவதே பொருத்தமாம். முதல்வனே ஞானகுரவனாக வருவன் எனக் கூறவேண்டா.—இங்ஙனம் கூறுவோர் சைவாகமம் உணர்ந்தோருட் சிலர்.

(ஈ) மறுத்துரைக்கும் சித்தாந்தத் துணிபு :—

(i) அரும்பு மலர் முதலியதாமே வளர்ந்து வருவனவாகக் காணப்படினும் அவற்றின் படிமுறை வளர்ச்சிக்கு ஞாயிற்றின் ஒளியும் வெப்பமும் இன்றியமையாதவை என்பதை அறிவியல் நூல் உணர்ந்தோர் உணர்வர்; அவ்வாறு, சரியை முதலிய தவத்தை இயற்றும் உயிர்களுக்கு அவற்றின் உணர்வைப் படிமுறையான் அலர்த்தி வருபவன் முதல்வனே ஆவன். "பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே" என்னும் மணிவாசகத்தின் கருத்து இதுவே. பாரித்தல்—வளர்த்தல்; முதல்வன் உயிர்களின் அறிவைப் பிணித்து நிற்கும் பாச சக்தியை மெலிவித்து அவ்வறிவை வளர்த்துவருதல் பற்றியே அம்மையப்பன் எனப்படுகின்றான். ஆதலால், எந்நிலையினும் உயிர் உணர்த்த உணர்வதேயன்றித் தானே உணர்வதன்று என்பது தெளியப்படும். திருவள்ளுவரும் "ஐயத்தினீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்—வானம் நணிய துடைத்து" என ஐயத்தின் நீங்குதலை வலியுறுத்துதலின், அது சற்குரவனாலன்றி ஒருவருக்கும் உளதாகாது என்க.

"சாத்திரத்தை ஓதினர்க்குச் சற்குரவன் தன்வசன
மாத்திரத்தே வாய்க்குநலம் வந்துறுமோ—ஆர்த்தகடல்
தண்ணீர் அருந்தினர்க்குத் தாகந் தணிந்திடுமோ
தெண்ணீர்மை யாய்இதனைச் செப்பு"

என்னும் திருமொழியும் இக்கருத்துப்பற்றியே எழுந்தது.

(ii) உலகத்து ஆசிரியர் ஆவார் புறப்பொருள்களைப் பற்றியே உணர்த்தவல்லுநர் ஆவர்; ஆன்மாவின் உணர்வைத் தன்னியல்பில் நிறுத்தி அதன் தன்னியல்பு உணர்த்துவார் அல்லர்; அஃது உயிர்க்குயிராய் நின்று உணர்வைச் செலுத்தி நிற்கும் முதல்வன் ஒருவனுக்கே கூடுவதொன்று. இது மேலும் விளக்கப்பட்டது. ஆதலால் கற்றறியும் உயிர்களுக்குத் தன்னியல்பாகிய மெய்யை உணர்த்துவோன் வாலறிவினனாகிய முதல்வனே எனக் கொள்க.

"புவனியிற் சேவடி தீண்டினன் காண்க!
சிவனென யானுந் தேறினன் காண்க!
அவனெனை யாட்கொண் டருளினன் காண்க!
குவளைக் கண்ணி கூறன் காண்க!"

என்றாற்போலும் உண்மையனுபவ அருள் உரைகள் நம்மனோரைத் தெளிவித்தற்கு உரியன.

(தொடரும்)

# திருவைந்தெழுத்து

சீலத்திரு. சிவஞானதேசிக சுவாமிகள், வந்தவாசி.

திருவைந்தெழுத்து எனச் சிறப்பித்து ஓதும் சிவ மந்திரம் சைவர்க்குத் தனி மந்திர நாயகமாயுள்ளது. மந்திரங்கள் எல்லாவற்றுள்ளும் அதுவே தலையாயது. அதனைக் குறித்து நம் சமயாசாரியர் எல்லாரும் திருமுறைகளுள் ஆங்காங்குப் பல பல வாக்கியங்களால் உபதேசித்தருளினர்.

இம்மந்திரத்தை ஓதாதவர், தம்மைச் சைவர்' என்று சொல்லிக்கொள்ளச் சிறிதும் உரிமையில்லாதவராவர். தம் தலைவனது பெயரையும் அறியாதவர் அத் தலைவர்க்குத் தாம் அடிமை என்பதை எவ்வாறு குறித்தற்கியலும்? தமக்கும் அவர்க்கும் உரிமை கொண்ட வேறு எத் தொடர்புண்டு? சைவராய்ப் பிறந்தும், திருநீறும் உருத்திராக்கமும் திருவைந்தெழுத்து மந்திரமும் கனவிலும் அறியாதார்க்கு அளவுண்டோ? அவ்வளவு பேரும் "ஏதும் ஒன்றும் அறிவிலராயினும் ஓதி அஞ்செழுத்தும் உணர்வார்" ஆயின், அவரவர் உள்ளத்தே அம்மையப்பர் குடிகொண்டு குதூகலம் அடைவர். அம்மந்திரநாயகத்தை நாடோறும் நினைத்தால் வினையெல்லாம் விலகிப்போம். அருந்தவம் தரும் அஞ்செழுத்தை ஓதினால், பிறவி பலவற்றில் தொடர்ந்து பொருந்தும் பிணி போகத் துரக்கும் ஒரு தனி மருந்தும் ஆவர் அம்மையப்பர்.

சிவபிரானைக் காணும் இடம் பலவற்றுள்ளும் சிறந்தது நெஞ்சகமே. பிறவகமெல்லாம் அதன் பின்னவே. அந்நெஞ்சகத்துக் காட்சிக்கும் பெருந்துணையாய் நிற்பது திருவைந்தெழுத்தே. "விண்ணினார் மதி சூடிய வேந்தனை எண்ணி, நாமங்கள் ஓதி, எழுத்தஞ்சும் கண்ணினால் (தியானம் பண்ணினால்) (அம் முழுமுதல்வன்) கழல் காண்பிடம் ஏதுஎனில், புண்ணியன் புகலூரும் என் நெஞ்சுமே." இது திருநாவரசர் திருவாக்கே. அதனால் தான் 'நெஞ்சகம் நைந்து நினைமின்' என்னும் கட்டளை தோன்றிற்று.

அத்திருவஞ்செழுத்து எவை? இவ் வினாவிற்கு விடையும் அவ்வருளாசிரியர் திருவாய் மலர்ந்தருளியவற்றில் உண்டு.

"அல்லல் ஆக ஐம்பூதங்கள் ஆட்டினும், வல்லவாறு **சிவாயநம** என்று நல்லாம் மேவிய நாதன் அடிதொழ (நம்மை) வெல்லவந்த வினைப்பகை (நாம் வெல்ல) வீடுமே." இராவணனுக்கு உயிர்ப்பகையாயிருந்தது கயிலை மலையெடுப்பு. அவ் வெடுப்பா லடுப்ப இருந்தது சாதலே. அச் சாதலை வென்றான் அவன். அதற்கு அவன் ஓதியது அத்தனிநாயக மந்திரமே ஆகும். "கடுத்தவாள் அரக்கன் கயிலை அன்று எடுத்த கரம், உரம், சிரம் நெரிந்து அலற, அடர்த்ததோர் விரலால் அஞ்செழுத்து உரைக்க, அருளினன் தடமிகு நெடுவாள்" என்பது திருஞான சம்பந்தர் திருவீழிமிழலையுள் அருளியது. அதனால், 'நற்றுணையாவது நமச்சிவாயவே' என்பது சத்தியம் ஆதல் விளங்கிற்று.

இவ்விளக்கம் உற்ற நம் முன்னோர் திருநீறணியும்போதெல்லாம் இம்மந்திரம் ஓதியே அணிவது வழக்கமாகக் கொண்டனர். 'மந்திரம் நமச்சிவாய ஆக நீறு அணியப்பெற்றால் வெந்தறும் வினையும், நோயும் வெவ்வழல் விறகிட்டன்றே." "திருவாய் பொலியச் சிவாயநம என்று நீறணிந்தேன்."

வினைப்பகையும் பிறவிப் பகையும் காமப்பகை முதலிய அறுபகையும் வேறு எப்பகையும் கொல்லவுதவும் படைக்கலம் ஆக நிற்கும் மந்திரம் எழுத்தஞ்சும். அப் படை நாவில் இருந்து நினைத்தபோதெல் லாம் அரிதின் முயன்றுபெற வேண்டாது, எளிதின் உயிர்க்கு அணித்தாய் நாவின் ஓத நெஞ்சின் உள்ளால் இருக்கும் அழி யாத ஞானக்கருவியாகும். அப்படைக் கலம் அருங்கலம் ஆகவும் திகழும். "படைக்கலமாக உன் நாமத் தெழுத்தஞ் சும் நாவிற் கொண்டேன்." 'என் நாவிற் கொண்டேன்' எனல் பிழையுற்ற பாடம். 'நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயவே'. அதை ஓதத் தொடங்கும்போதெல்லாம் நாக்கும் அம்மந்திரத்தை வணங்கியே தொடங்கும் கடப்பாடுடையது. 'நாவ ணங்கியல்பாம் அஞ்செழுத்து' என்றருளி ஞர் காழிவேந்தர். அவ்வாறு அதை ஓதி வருபவரே நல்லார். அந்நல்லார்க்கு நல் லியல்பு கோவணமும் பூதியும் சாதனமும் ஆகும். திருநீறும் சாதனமும் கண்டால் உள்கிவணங்கும் இயல்பு அடியார்க்குளது. அவ்வடிமை சான்ற குலச்சிறையார்க்கு அஃது ஒழுக்கம் ஆயிற்று. ஆகவே, அவ்வுண்மையைக் கண்டருளிய ஆளுடை பிள்ளையார், "நாவணங்கியல் பாம் அஞ்செழுத்தோதி நல்லராய் நல் லியல்பாகும் கோவணம் பூதிசாதனம் கண்டால் தொழுது எழு குலச்சிறை போற்ற . . . . அண்ணல் ஆலவாய் ஆவ தும் இதுவே" என்றருளினர்.

அச்சிவ மந்திர செபம் பண்ணும் போதேனும் சித்தம் ஒருங்கவேண்டும். அவ்வாறு இன்றேல் '**அத்தன் அருள் பெறல்**' அரிது. 'சித்தம் ஒருக்கிச் சிவாய நம என்று இரு.' 'இருக்கின் அல்லால் அத்தன் அருள் பெறல் ஆமோ அறிவி லாப் பேதை நெஞ்சே' என்பது வாகீசர் வாயுரை.

இறக்கும்போது மறக்கும் பொல் லாங்கு நேராதவாறு, இருக்கும்போது சிவ மந்திரத்தை ஓதி ஓதிப் பழகி இறக்கும் போழ்தில், தானே நாக்கு அம்மந்திரத்தை ஓதும்படி அவ்வுறுப்பிற்குத் தக்க வலி யேற்றிட வேண்டும். வலியேற்றவேண் டின் உருவேற்ற வேண்டும். துஞ்சும் போதும் அஞ்சும் ஓதும் நாவும்; நினைக்கும் நெஞ்சும், வணங்கும் மெய்யும் வாய்ப்பது சிலர்க்கேயாகும். அஞ்செழுத் தோதும் முறையும், அம்முறையை உணர்த்தும் உபதேசமும், அவ்வுபதேசத் தைச் செய்யவல்ல குருவும், திருவருள் துணையிருந்தால்தான் யார்க்கும் எய்தும். முன்னர்த் திருமடங்கள் தோன்றியது இச் சைவநலம் உண்டாக்குதற் பொருட்டே. 'சாம் அன்று நமச்சிவாய என்னும் அஞ் செழுத்தும் உரைக்கத்தருதி' என்றுவேண் டிய துணர்க. சிவபிரானை மறவாதிருக்க அதுவே சிறந்த உபாயம். "விக்கி அஞ் செழுத்தும் ஓத்தொழிந்து உம்மை மறக்கி னும் என்னைக் குறிக் கொண்மினே" என்ற திருவிருத்தத்தில், மறவாமைக்கு உபாயம் திருவைந்தெழுத்து என்பது விளங்கும். அதனால்தான் அதைச் சிந் தைச் சுருதி என்றனர். 'சிவாய நம என்னும் சிந்தைச் சுருதி' என்றது திருக்கன்றுப்பூர்த் திருத்தாண்டகம். அச் சுருதியன்றி மரணகாலத்தில் யாதும் இல்லை. 'செத்தால் வந்துதவுவார் ஒருவர் இல்லை.' அப்போது 'எந்தையார் திரு நாமம் நமச்சிவாய என்று எழுவார் ஆயின், அவர்க்கு இருவிசும்பில் இருக்கல் ஆம்'. ஏனையோர்க்கு அங்கிருத்தல் எங் ஙனம் ஆம்?

திருவைந்தெழுத்தோதும் முறைமை யைச் சித்தாந்தசாத்திரம் வல்லார் வாய்க் கேட்டுணர்தல் வேண்டும். பரம்பரை யுபதேச குருமார் இக்காலத்து அரியராயி னர். அதனால் உபதேசப் போலியும் உண்டாய்விட்டது. 'வஞ்சனையால் அஞ் செழுத்தும் வழுத்துவார்க்குச் சேயான்' என்று திருவீழிமிழலையில் திருநாவரசர் அறிவித்தருளினர். அக்காலத்தும் அத் தகைமை இருந்தது போலும். ❋

---

**திருநட்சத்திர விழா:**

செங்கல்பட்டு மாவட்டம், மதுராந்தகம் வட்டம் விச்சூர் கிராமத்தில் 28-8-63 அன்று ஸ்ரீலஸ்ரீ பரப்பிரம்ம லோக ஞானசுவாமிகள் அவர்களின் திருநட்சத்திர விழா மிகவும் சிறப்புற நடைபெற்றது.

# தோடுடைய செவியன்

## தோற்றுவாய் :

**திருஞான சம்பந்தர்** சைவ உலகின் தனிப் பெருந் தலைவர். சைவ சமயச் சான்றோர்களாகப் பலர் விளங்கியிருப்பினும், அவர்களிலெல்லாம் திருஞான சம்பந்தப் பெருமானே, தனிப் பெருஞ் சிறப்பும் முதன்மையும் மிக்குடையவராகப் போற்றப் பெறுகின்றார் 1.

சைவ சமய மக்கள் அனைவருக்கும் திருஞான சம்பந்தப் பெருமானே, தன்னிகர் அற்ற தனித் தலைமைப் பெருஞ்சான்றோர் எனத் திகழ்கின்றார். அவர்தம் திருப்பாடல்கள், வேதத்தைப் போலவே பெருஞ் சிறப்பும் மேன்மையும் புனிதமும் வாய்ந்தனவாகும் 2.

## சான்றோர் போற்றும் தலைவர் :

சம்பந்தர் பெருமானைப் போற்றிப் புகழாத தமிழ்ச் சைவச் சான்றோர்கள் ஒருவரும் இலர். அப்பர் சுந்தரர் போன்ற, பண்டைப் பெருஞ் சான்றோர்கள் முதலாக, பிற்காலப் புராண நூலாசிரியர்கள் பற்பலரும் ஈறாக, வாழையடி வாழையாக வந்த சான்றோர்கள் அனைவரும் திருஞான சம்பந்தரைப் புகழ்ந்து போற்றி வணங்கியுள்ளனர்.

வேதாந்த வித்தகர் ஆகிய **தத்துவராயர்**, சகலாகம பண்டிதர் எனத் திகழ்ந்த **அருள்நந்தி சிவாசாரியர்**, வீர சைவ வியன்பெருங் கவிஞர் **சிவப்பிரகாசர்**, உருவ வழிபாட்டை இகழ்ந்துரைக்கும் **காழிக் கண்ணுடைய வள்ளலார்**, சமரச சன்மார்க்க ஞானச் சான்றோர் **இராமலிங்க அடிகளார்** போன்ற பெருமக்கள் எல்லோருமே, திருஞான சம்பந்தப் பெருமானை மிகவும் புகழ்ந்து போற்றி, அன்புடன் வழிபடுதலில் ஒன்றுபட்டு விளங்குகின்றனர். 3.

## சௌந்தரிய லகரி:

ஆதி **ஸ்ரீ சங்கரர்சாரிய சுவாமிகளும்** கூட, தாம் பாடியருளிய **சௌந்தரிய லகரியில்** திருஞான சம்பந்தரைப் பெரிதும் போற்றிச் சிறப்பித்துப் புகழ்கின்றார்!

**தருண மங்கலை உனது சிந்தை**
**தழைந்த பால்அமுது ஊறினல்**
**அருண கொங்கையில் அதுபெ ருங்கவி**
**அலைநெ டுங்கடல் ஆகுமோ?**
**வருண நன்குறு கவுணி யன்சிறு**
**மதலை அம்புயல், பருகியே**
**பொருள்ந யம்பெறு கவிதை என்றொரு**
**புனித மாரி பொழிந்ததே.**

—சைவ எல்லப்ப நாவலர்.

## வரலாற்றுக் குறிப்பு :

இத்தகைய பெருஞ்சிறப்பின் மிக்க திருஞான சம்பந்தர், மூவாண்டுக் குழந்தையாக இருந்தபோது, சீர்காழிப் பிரமதீர்த்தக் கரையில், அம்மையப்பரால் சிவஞானப்பால் ஊட்

---

1. "Among the Saiva community of Southern India, no name is held in greater veneration than that of **Thiru Gnana Sambandha.**"

2 "For all the Saivas, and particularly for the Tamil Saivas, **Thiru Gnana Sambandha** is the highest authority, and his words have all the sanctity of the Vedas."

3 "All classes of poets, from his colleagues **Appar** and **Sundarar**, to the latest of Purana writers; from the purest Vedantists like **Tatuvarayar**, to the most uncompromising Dualists like **Arulnandhi Sivachariyar**; from the iconoclastic **Kannudaiya Vallalar**, to the Veera Saiva **Sivaprakasar**, unite in invoking his spiritual aid, at the Commencement of their literary labours......"—பேராசிரியர் 'மனோன் மணீயம்' பி. சுந்தரம் பிள்ளை, M.A.

டப் பெற்றார். சிவபாத இருதயர் ஆகிய தந்தையார் அஃதுணராது,'யார் அளித்த பால் அடிசில் உண்டது நீ?' என வெகுண்டார். 'எச்சில் மயங்கிட உனக்கு ஈது இட்டாரைக் காட்டுக' என்று, கைச் சிறியதொரு கோல்கொண்டு ஓச்சினார். அப்போது சிறிய பெருந்தகையார் ஆகிய திருஞான சம்பந்தர், ஆனந்தக் கண்ணீர் பெய்து, உச்சியினில் எடுத்தருளும் ஒரு திருக்கை விரல் சுட்டி, 'எம்மை இது செய்த பிரான் இவன் அன்றே' எனப் பிரமபுரம் மேவினார் தம்மை அடையாளங்களுடன் சாற்றினார். அதுதான் 'தோடு உடைய செவியன்' எனும் மெய்ம்மை மொழித் திருப்பதிகம்.

தோடுடைய செவியன் விடையேறி
ஓர் தூவெண் மதிசூடி
காடுடைய சுடலைப்பொடி பூசிஎன்
உள்ளங்கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாட்
பணிந்தேத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுரம் மேவிய
பெம்மான் இவன் அன்றே

## பாடலின் முதன்மை :

*திருஞான சம்பந்தப் பெருமான் முதன் முதலாகப் பாடியருளிய திருப்பாடலாகவும்,* சைவத் திருமுறைகள் பன்னிரண்டிற்குங்கூட, அவற்றின் தொடக்கத்தே அமைந்த முதற்றிருப் பாடலாகவும் திகழ்வது, 'தோடுடைய செவியன்' என்னும் இத் தேவாரத் திருப்பாடல். ஆதலின் அத்துணைச் சிறப்பு மிகுந்த இத் தேவாரத் திருப்பாடலின் பொருளை, இயன்ற வரையில் ஈண்டு ஒரு சிறிது காண்போம்!

## பாடலின் பதப்பொழிப்புரை :

*தோடு அணிந்த திருக்காது உடையவன்.* காளை மாட்டின்மீது ஏறி உலா வருபவன். தூய வெண்மையான சந்திரனைச் சூடுபவன். சுடு காட்டில் உள்ள திருநீற்றைப் பூசிக் கொண்டிருப்பவன். என் உள்ளத்தைக் கவர்ந்து கொண்ட கள்வன். இதழ்கள் பொருந்திய மலரினன் முற்காலத்தில் வணங்கித் துதித்ததினால், இதுபோது எனக்கு ஞானப்பால் ஊட்டி அருள் புரிந்தவன். சிறப்பையுடைய பிரமபுரம் என்னும் சீர்காழியில் எழுந்தருளி விளங்கும் பெருமான் ஆகிய இவன் அன்றோ, எம்மை இது செய்தான்!

## சிறப்பியல் நுட்பக் குறிப்புகள் :

1. தோடு-பெண்கள் அணியும் காதணி. குழை என்பது ஆண்கள் அணியும் காதணிக்குப் பெயர். இறைவன் அம்மையும் அப்பனுமாக வந்து காட்சி யளித்துத் தமக்கு அருள் புரிந்த சிறப்புத் தோன்ற, அம்மைக்கு உரிய காதணியாகிய தோடு பற்றிக் குறிப்பிட்டருளினார். ''தோடுடையான் ஒரு காதில் தூய குழை தாழ'' எனவும், ''தோடு பெய்து ஒரு காதினில் குழை தூங்க'' எனவும், பிற இடங்களிலும் கூடச் சம்பந்தர் பாடியிருக்கும் திறம் ஈண்டுக் கருதியுணரத் தகும்.

2. அம்மையின் வாயிலாகவே அப்பனின் அருளை அடைய வேண்டும் ஆதலின், அது பற்றியும் அம்மையைச் சம்பந்தர் இங்ஙனம் முதற்கண் குறிப்பிட்டுச் சிந்தித்து வந்தித்தார் எனவும் கொள்ளலாம்.

3. இறைவனின் திருவடி முதலிய பல பிற உறுப்புக்கள் இருப்பவும், அவற்றையெல்லாம் முதற்கண் சிறப்பித்துப் போற்றாமல், தாம் பாடத் தொடங்கும் திருப் பாடல்களை இறைவன் தனது திருச் செவியில் ஏற்றருளல் வேண்டும் என விரும்பும் தம் விண்ணப்பம் புலப்படுதற் பொருட்டு, முதற்கண் ''தோடுடைய செவியன்'' என இறைவனின் திருக் காதினையே சம்பந்தர் போற்றிப் புகழ்ந்தருளினார். இவ் வுண்மையை ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகளும், ''தம் பாடல் பரமர்பாற் செல்லும் முறை பெறுவதற் குத் திருச் செவியைச் சிறப்பித்தார்'' எனக் கூறுதல் கொண்டு உணரலாம்.

4. முன்னொரு காலத்தில் சிவபெருமானை அசுவதரன் கம்பளன் என்னும் கந்தருவர்கள் இருவர் இன்னிசை பாடிப் பரவினர். அது கேட்டுத் திருவுளம் மகிழ்ந்த சிவபெருமான், அவர்களின் இன்னிசையை என்றும் கேட்டு இன்புறுதற்பொருட்டு, அக் கந்தருவர்கள் இருவரையும் காதணியாக மாறச் செய்து, தன் திருச் செவிகளில் அணிந்துகொண்டு அருள் புரிந்தான். கந்தருவர்களின் இன்னிசைப் பாடலுக்கு மகிழ்ந்த சிவபெருமான், தம் இன்னிசைப் பாடல்களையும் கேட்டு மகிழ்ந்தருளல் வேண்டும் என்ற ஒரு குறிப்பும் ''தோடு உடைய

**செவியன்**" என்ற இனிய தொடரில் அமைந் திருக்கின்றது.

5. வடமொழி வேதம் '**எழுதாக் கிளவி**' எனப்படும். தாம் பாடத் தொடங்கும் தமிழ் வேதம் ஆகிய தேவாரமோ '**எழுதும் மறை.**' வேதம் ஓதப் புகுவோர் '**ஓம்**' என்று முதற்கண் கூறியே தொடங்குவர். '**மறை முதல்**' ஆகிய பிரணவம் உரைத்த பின்னரே வேதம் ஓதுதல் மரபு. இதனை,

"ஓம்என்று மறைபயில்வார்
பிரமபுரத் துறைகின்ற
காமன்றன் உடல்எரியக்
கனல்சேர்ந்த கண்ணுனே"

எனச் சம்பந்தரே, பிறிதோர் இடத்திற் குறிப் பிடுகின்றார். ஆதலின் **தோடு** என்னும் முதல் மொழியில் ஒ(ங்)காரம்* புணர்த்தி யுரைக்கப் பெற்றது. அப் பிரணவநாதமும், சட ஆகாசம் ஆகிய பூத ஆகாசத்தின் அல்லாமல் சிதா காசம் ஆகிய தகர ஆகாசத்தில் தோன்றும் சுத்த நாதம் ஆதலின், த்+ஒ எனத் தகர மெய் யெழுத்தோடு சேர்த்துக் கூறப்பெற்றது. இக் கருத்தும்,

"எல்லையிலா மறைமுதல், மெய்
யுடன்எடுத்த எழுதும்மறை
மல்லல்நெடுந் தமிழால்,இம்
மாநிலத்தோர்க்கு உரைசிறப்ப"

எனப் போதரும் வரிகளில், சேக்கிழார் சுவாமி களால் விளக்கியருளப் பெற்றுள்ளது. தகரம் காயத்ரி மந்திரத்தின் முதலெழுத்து என்பதும் ஈண்டு உணரத் தக்கது.

6. '**விடையேறி**' என்பதற்கு '**விடையின் மேல் ஏறுபவன்**' எனப் பெயராகவும், '**விடை யின்மேல் ஏறிக்கொண்டு**' என வினையெச்சம் ஆகவும், இருவகையிற் பொருள் கொள்ளலாம்.

* 'ஓகாரம்' என்னும் சொல்லே 'ஓங்கா ரம்' என வழங்கும். மோதிரம் மோந்திரம் எனவும், புல்பூடு புல்பூண்டு எனவும், கூடு கூண்டு எனவும் வருதல் காணலாம். சொற்கள் இங்ஙனம் வருதலை Nasalisation அல்லது Euphonic Nunnation என மொழி நூலறிஞர்கள் குறிப்பிடுவர்.

7. இவ்வாறே '**மதிசூடி**' '**சுடலைப்பொடி பூசி**' என்பனவும் பெயராகவும், வினை எச்சமாக வும், இருவகையிற் பொருள்தந்து நிற்கும். இவற்றை வினை எச்சங்களாகக் கொண்டால், '**உள்ளம் கவர் கள்வன்**' என்னும் தொடரில் உள்ள கவர் என்னும் வினைச் சொல்லைக் கொண்டு முடியும்.

8. இவற்றை எச்சமாகக் கொள்ளாமல் வினையால் அணையும் பெயர்களாகக் கொண் டால் "மதிசூடி(க்) காடுடைய சுடலைப் பொடி பூசி" என வல்லொற்று மிகுவதாகக் கொள்ளா மல், "மதிசூடி, காடுடைய சுடலைப் பொடிபூசி" என இயல்பாகக் கொள்ளுதல் வேண்டும்.

9. இறைவனை "**உள்ளம் கவர் கள்வன்**" எனக் குறிப்பிட்டருளிய தொடர், மிகவும் சிறப் பும் அருமைப்பாடும் வாய்ந்தது. இறைவனை வடமொழி வேதமும் "**தஸ்கராணும்பதயே நம:**" (திருடர்களுக்குத் தலைவனே! வணக்கம்) என விதந்தெடுத்துப் போற்றியது என்பர் அறி ஞர். "உயிர்களுக்கு உடனாய் நின்றும் பசு ஞான பாச ஞானங்களான் அறியப்படாமை பற்றிக் கள்வன் என்றார்" என்பது **சிவஞான போதப் பேருரை.**

இறைவன் உயிர்களுக்கு உடனாய் எஞ் ஞான்றும் பிரிவற நின்றுள்ளானாயினும், அவை கள் அவனது அவ் வியல்பினை உணர்ந்து கொண்டு மகிழும் பேறு பெறுவது ஞானங் கைவரப்பெற்றுத் தூயபேரின்பநிலை எய்தியபின் னரே யாகலின், ஆளுடைய பிள்ளையார் ஆகிய திருஞான சம்பந்தர் தூய பேரின்பநிலை எய்தப் பெற்றுவிட்டார் என்னும் பேருண்மையினை, இச் சிறந்த இனிய தொடர் மலையிலக்கென விளக்கி நிற்கின்றதெனலாம்.

10. '**ஏடுடைய மலரான்**' என்பதனை '**ஏடு டையமலரால்**' எனப்பிரித்து உணர்தல் வேண் டும். இங்ஙனம் பிரித்து உணர்ந்தால், திருஞான சம்பந்தர் முற்பிறவிகளில் இறைவனை இதழ்களை யுடைய மலர்களினால் அருச்சித்துப் பணிந்து ஏத்தியவர் என்றும், அதனாலேயே இறைவன் அவருக்கு இப் பிறவியில் ஞானப்பால் அளித்து அருள்புரிந்தான் என்றும் உண்மையுணரலாம். ஆசிரியர் மெய்கண்டார் தமது சிவஞான போதச் செம்பொருள் நூலில், "**முற்செய் தவத் தான் ஞானம் நிகழும்**" எனத் திருஞான சம்பந்

தரையே நினைவுகூரும் வண்ணம் அருளிச் செய்ததும், சேக்கிழார் சுவாமிகள் "தவ முதல்வர் சம்பந்தர்" என விதந்து ஓதியதும் பிறவும், இப் பொருளுக்குத் துணைபுரியும். "ஏடுடைய மலரான்—பிரமன்" எனக்கொண்டு அதற்கு ஏற்பவும் சிலர் பொருள் கூறுவர்.

11. பிரமன் வழிபட்டுப் பேறுபெற்ற காரணத்தால், சீர்காழிக்குப் பிரமபுரம் என்பது ஒரு பெயர். செய்யுள் அமைப்பு நோக்கி, அது பிரமாபுரம் என வந்தது. தாம் பாடிய முதல் திருப்பதிகத்தில், முதன்முதலாகக் குறிப்பிட்டருளிய 'பிரமபுரம்' என்னும் இப்பெயரினையே, யாண்டும் முதலாக வைத்துச் சீர்காழிக்கு உரிய பன்னிரண்டு பெயர்களுள் ஒன்றாக ஓதும் நியமம் உடையவர் திருஞான சம்பந்தர். இதனை அவர் பாடியுள்ள திருச்சக்கரமாற்று, மாலைமாற்று முதலிய திருப்பதிகங்களிற் காணலாம்.

12. 'இவன் அன்றே' என்னும் இனிய தொடர், "யார் அளித்த பால் அடிசில் உண்டது நீ?" என வினவி "எச்சில் மயங்கிட உனக்கு ஈது இட்டாரைக் காட்டு" என்று வெகுண்டு கட்டளையிட்ட சிவபாத இருதயர்க்குத் திருஞான சம்பந்தர் விடைகூறிச் சுட்டிக்காட்டும் முறையில் அமைந்ததாகும். இத் தொடரின் பொருட்குறிப்பு நம்மனோர்க்குச் செவ்விதின் விளங்குதற்பொருட்டு "எம்மை இது செய்த பிரான் இவன் அன்றே" (அல்லவா) என விரித்துரைத்துக் காட்டி விளக்கி யருள்கின்றார் சேக்கிழார் பெருமான் :—

செம்மைபெற எடுத்ததிருத்
'தோடுடைய செவியன்'எனும்
மெய்ம்மைமொழித் திருப்பதிகம்
பிரமபுரம் மேவினர்
தம்மைஅடை யாளங்களுடன்
சாற்றித் தாதையார்க்கு
'எம்மைஇது செய்தபிரான்
இவன் அன்றே!' என இசைத்தார்.

(தொடரும்)



சென்னை பல்லாவரம் திரிசூல நாதர் திருக்கோயிலில் (18—8—63) திருப்பணித் தொடக்கவிழா நிகழ்ந்தது. திரு முருக. கிருபானந்தவாரியார் "கண்ணப்ப நாயனார்" பற்றிய இன்னிசைச் சொற்பொழிவு ஆற்றினார். பெருந்திரளான மக்கள் விழாவுக்கு வந்து சிறப்பித்தனர்.

# உடையார்குடி திருவனந்தீஸ்வரத்துக் கல்வெட்டுச் செய்திகள்*

வித்துவான். திரு. வை. சுந்தரேச வாண்டையார், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

உடையார்குடி என்பது தென்னார்க்காடு சில்லா சிதம்பரந்தாலுக்கா காட்டுமன்னார்முடி என்னும் ஊரின் ஒரு பகுதியாகும். வீர நாராயண சதுர்வேதி மங்கலம் என்பது இந்த உடையார் குடியின் பழம்பெயர். வீர நாராயணன் என்பது தஞ்சாவூரைத் தலைநகராகக் கொண்டு சோழமண்டலத்தை ஆண்டுவந்த முதற் பராந்தக சோழனது சிறப்புப் பெயர்களுள் ஒன்று. அம்மன்னன் பெயரால் இவ்வூர் வீரநாராயண சதுர்வேதி மங்கலம் என்னும் பெயர் எய்திற்று. சதுர்வேதி மங்கலம் என்பது சில சிற்றூர்களைத் தன்னகத்துக் கொண்டது. (தனியூரும் சதுர்வேதி மங்கலம் என்று அழைக்கப் பெறுதல் உண்டு.) இந்த வீர நாராயண சதுர்வேதி மங்கலம் பண்டித வத்சலச் சேரி, ஸ்ரீதரநாராயணச்சேரி முதலான ஊர்களைத் தன்னகத்துக் கொண்டது. இது வீர நாராயணம் ஆகிய சுந்தர பாண்டிய சதுர்வேதி மங்கலம் என்னும் பெயர் பெற்றதை, மாறவர்மன் குலசேகரபாண்டியனின் 36ம் ஆண்டுக் கல்வெட்டு அறிவிக்கின்றது.

உடையார்குடி என்னும் பெயர் பெற்றதற்குக் கல்வெட்டு ஆதாரம் இல்லை. இவ்வூரிலுள்ள சிவன்கோயிலுக்குத் திரு அனந்தீஸ்வரம் என்று பெயர். இக்கோயிலில் சோழ மன்னர்களில் முதலாம் பராந்தகன், கண்டராதித்தன், உத்தம சோழன், சுந்தர சோழன், இரண்டாம் ஆதித்தன், முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திர சோழன், விசய ராசேந்திரன், விக்கிரம சோழன் இவர்கள் காலங்களிலும், பாண்டிய மன்னர்களில் ஜடாவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தர பாண்டியன், மாறவர்மன் குலசேகரதேவன், ஜடாவர்மன், திரிபுவனச் சக்கரவர்த்தி வீர பாண்டியன் இவர்கள் காலங்களிலும், விசயநகர வேந்தரில் மகாமண்டலேஸ்வரன் வீர அரியப்ப உடையார் காலத்திலும் செதுக்கப் பெற்ற எழுபது கல் வெட்டுகள் இருக்கின்றன.

## இறைவரின் திருப்பெயர் :

இக்கல்வெட்டுக்களில் இறைவர் 'திருவநந்தீஸ்வரத்துப் பரமசாமி' 'திருவநந் தீஸ்வரத்தாள்வார்' திருவநந்தீஸ்வரத்துப் பெருமாள், திருவனந்தீஸ்வர முடையார், என்னும் திருப்பெயர்களால் அழைக்கப் பெறுகின்றனர்.

## சந்திரசேகரப்பெருமாள்

இத் திருக்கோயிலில் சந்திரசேகரப் பெருமாளையும் அவரது நாச்சியாரையும் எழுந்தருளுவித்து வழிபாட்டிற்கு நிவந்தம் அளித்தவர் முதலாம் இராசேந்திர சோழதேவரது தேவியாராகிய வானவன்மா தேவியார் ஆவர். இந் நிகழ்ச்சி அம்மன்னரது எட்டாவது இராச்சிய ஆண்டில் அதாவது கி.பி. 1020 இல் குறிக்கப் பெற்றுள்ளது.

## கூத்தப்பெருமாள்

பரகேசரிவர்மனின் இரண்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு இத்திருக்கோயிலில் தயத்தொங்க தெரிஞ்ச கைக்கோளரில் ஒருவராகிய அரையர் செயவிடங்கர் என்பார் கூத்தப்பெருமாள், கணபதியார், பிச்சர் இவர்களுக்குக் கருங்கல்லால் கோயில்களைக் கட்டுவித்த செய்தியை உணர்த்துகின்றது. சிங்களாந்தகத் தெரிஞ்ச கைக்கோளரில் ஒருவராகிய அரையர்

* See the Annual report on South Indian Epigraphy for the year 1920. Nos 537—627 Epigraphia Indica Vol. XXI Page 165—South Indian Inscriptions Volume 13. The Cholas. Nos 17, 56—62, 90—93, 119,146—148, 198, 224—225, 249, 256, 276, and 340.

செயவிடங்கர் என்பார் கூத்தப் பெருமாளுக்கு மூன்று காசுகளை மூலதனமாக வைத்து அவ்வ களால் வரும் வட்டிக்கு இரண்டு பரிசட்டங்களை வாங்கிச்சாத்துமாறு பாண்டியன் தலைகொண்ட பரகேசரிவர்மனின் இரண்டாம் ஆட்சி யாண்டில் ஏற்பாடு செய்திருந்தார். (பாண் டியன் தலைகொண்ட பரகேசரிவர்மர் என்பார் இரண்டாம் ஆதித்த சோழர் ஆவர்.)

## சூரியதேவர்

இத் திருக்கோயிலில் சூரியதேவரை எழுந் தருளுவித்தவர் குந்தவையார் என்னும் அம்மை யார் ஆவர். இந் நிகழ்ச்சி பரகேசரிவர்மரின் பன்னிரண்டாம் ஆட்சியாண்டில் நிகழ்ந்தது.

## மடம்

இவ்வூரில் திருமடம் ஒன்று இருந்தது. கங்கையும் கடாரமும் பூர்வதேசமும் கொண்ட முதலாம் இராசேந்திரன் பெயரால் பெரிய இராசேந்திர சோழர் திருமடம் என்னும் பெயர் பெற்றிருந்தது. அதில் 12 பிராமணர்களுக்கு அமுது அளிக்கப் பெற்று வந்தது. ஆனல் அவ்வறம் நடவாமல் நின்று போய்விட்ட மையால் விக்கிரமசேழன் அவ்வறம் மீளவும் நடப்பதற்கு வரி இல்லாமல் நிலம் அளித் துள்ளான். இச் செய்தியை அம்மன்னனது 5-ஆம் ஆண்டுக் கல்வெட்டு உணர்த்து கின்றது.

## இவ்வூரைத் தன்னகத்துக் கொண்ட நாடு

முதலாம் இராசராசன் காலத்தில் இவ்வூர் (வீரநாராயண சதுர்வேதி மங்கலம்) வடகரை இராசேந்திர சிங்க வளநாட்டுக்கு உட்பட் டிருந்தது. இங்கே வடகரை என்பது காவிரிக்கு வடகரையாகும். 'திருமகள் மருவிய' என்னும் தொடக்கமுள்ள மெய்க்கீர்த் தியையுடைய இரண்டாம் இராசேந்திரன் (1052—1064) காலத்துக் கல்வெட்டு இவ் வூரை இராசாதிராச வளநாட்டுப் பிரமதேயம் வீரநாராயண சதுர்வேதி மங்கலம் என்று குறிப் பிடுகின்றது. எனவே முதலாம் இராசாதி ராசன் காலத்தில் இந்த இராசேந்திர சிங்க வளநாடு, இராசாதிராச வளநாடு என்னும் பெயர் பெற்றுள்ளதாதல் வேண்டும். ஜடா வர்மன் திரிபுவன சக்கரவர்த்தி வீரபாண்டிய தேவரின் 14-ஆம் ஆண்டுக்கல்வெட்டு இவ் வூரை, வடகரைவிருதராச பயங்கர வளநாடு என்று குறிப்பிடுவதோடு இவ்வூரை, சுந்தரபாண்டிய சதுர்வேதி மங்கலம் என்றும் கூறுகின்றது. எனவே முதலாம் குலோத்துங்க சோழனுக்கு விருதராச பயங் கரன் என்ற சிறப்புப் பெயர்க் காரணம் பற்றி விருதராச பயங்கர வளநாடு என்று அவன் காலத்தில் பெயர்வைக்கப் பெற்றதாகும். மேலும் வீரபாண்டியன் கல்வெட்டு வீரநாரா யணத்தை, ஒரு தனியூர் என்றும் குறிப்பிடு கின்றது.

## வரலாற்றுச்செய்திகள்

முதலாம் இராசராசசோழனது தமையன் இரண்டாம் ஆதித்த சோழன் ஆவன். இவன் பாண்டியன் தலைக்கொண்ட பரகேசரி என்று கல்வெட்டுக்களில் கூறப் பெற்றவன். இவன், சோமன், இவன் தம்பி ரவிதாசனுன பஞ்சவன் பிரமாதிராஜன், இவன் தம்பி ரவிதாசனுன பஞ் சவன் பிரமாதிராஜன், இவன் தம்பி பரமேஸ்வர னை இருமுடிச் சோழ பிரமாதிராஜன் இவர் களால் கொல்லப்பட்டான். இச்செய்தி இக் கோயிலில் உள்ள "ஸ்வஸ்தி ஸ்ரீ கோ இராஜ கேசரிவர்மர்க்கு யாண்டு இரண்டாவது வட கரை பிரமதேயம் ஸ்ரீவீரநாராயண சதுர்வேதி மங்கலத்து பெருங்குடி மக்களுக்கு சக்கரவர்த்தி திருமுகம். பாண்டியனைத் தலைகொண்ட கரிகால சோழனைக் கொன்ற துரோகிகளான சோமன் இவன்தம்பி ரவிதாசனுன பஞ்சவன் பிராமாதிராஜனும், இவன் தம்பி பரமேஸ் வரனை இருமுடிச் சோழ பிரமாதிராஜனும் இவர்கள் உடன் பிறந்த மலையனூரானும்......" எனத் தொடங்கும் கல்வெட்டு உணர்த்து கின்றது. இக்கல்வெட்டின் எஞ்சிய பகுதியால், மேற்குறித்தவர்களின் நிலங்களை, கொட்டை யூர் பிரமாதிராஜன், புள்ளமங்கலத்துச் சந் திரசேகரப்பட்டர் இவர்கள் கண்காணியால் குடியோடு குடிபெறும் விலைக்கு விற்றுக் கருவூலத்தில் இடுமாறு வீரநாராயண சதுர் வேதிமங்கலத்துச் சபையார்க்கு முதலாம் இராசராசன் தன்ஆட்சியின் இரண்டாம் ஆட்சியாண்டில் கட்டளையிட்டிருந்தான். அச் சபையாரும் அவ்வறே செய்துள்ளனர்

மேற்குறித்தவர்களில் மலையனூரானுன இரேவதாசக்கிரம வித்தன், இவன் மகன்,

இவன் தாய் பெரிய நங்கைச்சானி இவர்களுக்குச் சொந்தமாய் உள்ளதும் வீரநாராயண சதுர்வேதி மங்கலத்தின் மேல்பிடாகை (பிடாகை—சிற்றூர்) தேவமங்கலத்தில் இருந்ததுமான இரண்டேமுக்காலே ஒருமா நிலத்தையும் ஆறு மனைகளையும் வீரநாராயணச் சதுர்வேதி மங்கலத்தாரிடமிருந்து, வெண்ணெய்யூர் நாட்டு வெண்ணெய் யூருடையான் நக்கன் அரவணையானுன பல்லவ முத்தரையன் மகன் பரதனுன வியாள கஜமல்ல பல்லவரையன் 122 கழஞ்சு, பொன் கொடுத்து வாங்கி அவைகளின் வருவாயைக் கொண்டு திரு அனந்தீஸ்வரத்து இறைவர் கோயிலின் முன்புள்ள மூவாயிரத்து அறுநூற்றுவன் நிலையம்பலம் என்னும் மண்டபத்திலிருந்து மக்களுக்குத் தண்ணீர் கொடுப்பதற்கும் 15 பிராமணர்கள் நாள்தோறும் உண்பதற்கும் ஆக ஏற்பாடு செய்திருந்தான் என்னும் செய்திகள் அறியக் கிடக்கின்றன. (E. I. Vol XXI Page 165.)

மழவரையர் மகளார் செம்பியன் மாதேவியாரின் கணவனுர் கண்டராதித்த சோழதேவர் இவ்வூர்க் கல்வெட்டில் (A. R. E. No. 540. of 1920) மேற்கெழுந்தருளின பெருமாள் எனக் கூறப் பெற்றுள்ளனர்.

திருக்காளுட்டுமுள்ளூர் என்பது காட்டுமன்னுர் கோயிலுக்குத் தென்கிழக்கே சுமார் எட்டுமைல் தூரத்தில் கொள்ளிடப் பேராற்றின் வடகரையில் உள்ள தேவாரம் பெற்றதலமாகும். இக் கோயிலில் உள்ள கல் வெட்டுக்கள் பிற்காலத்தவை. எனினும் திருவனந்தீஸ்வரத்தில் உள்ள பரகேசரி வர்மரின் 14-ம் ஆண்டுக் கல்வெட்டு திருமுள்ளூர், காளுட்டுப் பிரமதேயத்தைச் சேர்ந்தது என்றும், அது சிம்மவிஷ்ணு சதுர்வேதி மங்கலம் என்னும் பெயர் பெற்றிருந்த தென்றும், அக் கோயிலின் இறைவர் பெயர் திருமுள்ளூர் உடைய பரமசுவாமி என்றும், அப் பெருமானுக்கு ஸ்ரீ பலிவிழா நடத்துவதன் பொருட்டுக் குளப் பாய்ச்சல் உள்ள நிலத்தைக் கரிகால சோழத் தெரிஞ்சகைக் கோளர்களில் (Warlike Community) காளி கற்றளி என்பான் வாங்கி அளித்திருந்தான் என்றும் அறிவிக்கின்றது. எனவே திருக்காளுட்டு முள்ளூரைப் பற்றிய கல்வெட்டு ஒன்று திரு அனந்தீஸ்வரத்தில் இருப்பது மகிழ்ச்சிக்கு உரியதாகும்.

**அளிக்கப்பெற்ற நிவந்தங்கள் :**

இராசகேசரி வர்மனின் 3-ஆம் ஆண்டில் திருவனந்தீஸ்வரமுடையார் திருமுற்றத்திலே சந்திராதித்தவரை பிராமணபோஜனஞ் செய்வதற்குக் கங்கன் அம்பலவன் கண்டராதித்தனுகிய மும்முடிசோழ விழுப்பரையன் 19 வேலியே நான்கு மாமுக்காணி நிலத்தை வாங்கிக் கொடுத்திருந்தான். அந்நிலத்தின் வருவாயில் இறைபோக்கி, மிக்க போகங்கொண்டு நாடோறும் ஐம்பத்தாறு பிராமணரை ஊட்டுவிக்க ஏற்பாடு செய்யப் பெற்றிருந்தது.

தேவன்மங்கலத்து அனந்தவிக்கிரம மங்கலப் பேரரையன், முதற்பராந்தக சோழனின் 38-ஆம் ஆட்சியாண்டில் மூன்றுவேலி நிலத்தை நாடோறும் இருபத்தைந்து பிராமணர்கள் உண்ணும்பொருட்டு வாங்கி அளித்திருந்தான். அரசன் இந் நிலங்களுக்கு நிலவரியை நீக்கிவிட்டான்.

இறைவர்க்குத் திருப்பள்ளி யெழுச்சியின் பொருட்டும், மாதச் சங்கிரமணத்தில் ஆயிரம் குடம் தண்ணீர் கொண்டு திருமஞ்சனம் ஆட்டுவதன் பொருட்டும் நிவந்தங்கள் அளிக்கப் பெற்றிருந்தன. நுந்தா விளக்குகளுக்கு ஆடுகளும் பொன்னும் அளிக்கப் பெற்றிருந்தன.

**சபை கூடிய இடம் :**

உத்தம சோழனின் 10-ஆம் ஆண்டுக் கல்வெட்டு, நம்பி என்பான் சபைகூடும் கட்டிடத்தைக் கட்டி அதில் நூறுபிராமணர்கள் உண்ண ஏற்பாடு செய்திருந்ததை உணர்த்துகிறது. முதலாம் இராசராச சோழனின் 27-ஆம் ஆண்டுக் கல்வெட்டு இராசராசன் மண்டபத்தில் சபை கூடியதைக் கூறுகின்றது.

குறிப்பு:—இக் கல் வெட்டுக்களில் பலவற்றை நான் நேரில் படித்து எழுதுவதற்கு வேண்டும் வசதிகளைச் செய்து அருளிய காட்டுமன்னுர்கோயில் நாட்டுச் சின்னப்பண்ணை திரு. M, இராமலிங்கம் பிள்ளை அவர்கட்கு என் நன்றி என்றும் உரியதாகும்.

---

## செய்திச் சுருக்கங்கள்

திருவாமூர்த் திருநாவுக்கரசு சுவாமிகள் கோயில் மகா கும்பாபிஷேக விழா, 14—7—63 ஞாயிறன்று மிகவும் சிறப்புற நடைபெற்றது. தருமை யாதீனம், மதுரை யாதீனம், குன்றக் குடித் திருவண்ணுமலை ஆதீனம் ஆகிய மூன்று மகா சந்நிதானங்களும் எழுந்தருளிச் சிறப்பித் தனர். தமிழவேள் திரு. பி. டி. ராஜன், திரு. ஓ. பி. இராமசாமி ரெட்டியார், திரு. அ. உத் தண்டராம பிள்ளை, ஆணையர் திரு. மா. சே. சாரங்கபாணி முதலியார், திரு. எஸ். செல்ல பாண்டியன், நீதிபதி பி. எஸ். கைலாசம், திருமதி சௌந்தரா கைலாசம், பாண்டிச்சேரி அம்பலத்தாடி மடம் சுவாமிகள் ஆகிய பெரு மக்கள் பலர் கலந்துகொண்டனர். கும்பாபி ஷேகம் மிகவும் சிறப்புற நடந்தது,

இதன் மண்டலாபிஷேக விழா 27—8—63 செவ்வாய் அன்று சிறப்புற நடைபெற்றது. திரு. ஓ. பி. இராமசாமி ரெட்டியார் அவர்கள் தலைமையில், திரு. ந. சண்முக சுந்தர தேசி கரின் "அப்பர் சுவாமிகள் புராண விரிவுரை" நிறைவும், திரு. கி. வா. ஜகந்நாதன் M.A., அவர் களால் "திருநாவுக்கரசர் தேவாரம்" வெளி யீடும், சென்னை திரு. M. N. சாம்பசிவ சிவாச் சாரியார் அவர்களால் "திருநாவுக்கரசர்" இன்னிசைச் சொற்பொழிவும் நிகழ்ந்தன. சென்னைத் தருமையாதீன சமயப் பிரசார நிலையத் தலைவர் வித்துவான் ஸ்ரீலஸ்ரீ சோம சுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள், இவற்றையெல்லாம் முன்னின்று சிறப்புற நடத்தி நிறைவேற்றி வைத்தருளினுர்கள்.

---

## மகாசம்ப்ரோக்ஷண விழா

திருக்கண்ணபுரம் ஸ்ரீ சௌரிராஜப் பெருமாள் சந்நிதி, ராஜகோபும், விமானங்கள், ஆழ்வார் சந்நிதிகள் முதலியவைகள் ஜீர்ணோத்தாரணம் செய்யப்பட்டு நாளது சோபகிருது ஹு ஆவணி மீ 21உ (6-9-63) காலை 6½ மணிக்கு மேல் 8½க்குள் மகாசம்ப்ரோக்ஷணம் நடை பெறுவதால் பக்தர்கள் திரளாக வந்து தரிசித்துப் பயனடையுமாறு கேட்டுக் கொள்ளப் படுகிருர்கள்.



மதுரைக் கும்பாபிஷேக விழாவில் ஒருகாட்சி

# திருக்கோயில்

(சென்னை அரசாங்க அறநிலைய ஆட்சித்துறையின் திங்கள் வெளியீடு)



ஐந்தாம் ஆண்டு

(1962 அக்டோபர் முதல் 1963 செப்டம்பர் வரை)



பதிப்பித்து வெளியிடுபவர் :

ஆணையர், அறநிலைய ஆட்சித்துறை,

சென்னை - 34.



அச்சிடுவோர் :

தி யுனைடெட் பிரிண்டர்ஸ், 3/27, பிராட்வே, சென்னை-1.

# திருக்கோயிலில் ஐந்தாம் ஆண்டு இதழ்களில் வெளிவந்த கட்டுரைகள்
## (1962 அக்டோபர் முதல் 1963 செப்டம்பர் வரை)

# ஆணையர் கலந்து கொண்ட நிகழ்ச்சிகள்

17-8-63 மதுரை, தல்லாகுளம் பிரசன்ன வேங்கடாசலபதி கோயிலில், நெல்லை ஸ்ரீ சடகோபன் அவர்களின் “குருபரம்பரை” பற்றிய சொற்பொழிவுத் தொடக்கவிழா.

19-8-63 மதுரைமாவட்டம், சின்னமனூர்ப் பூலானந்தீசுவரர் கோயில் திருப்பணித் தொடக்க விழா.

23-8-63 சென்னை அய்னுவரம் ஐ. சி. எப். கமலவிநாயகர் கோயிலிற் சதுர்த்தி விழாச் சொற்பொழிவில் தலைமை.

## கும்பாபிஷேகம்

தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமான திருபுவனம் ஸ்ரீ கம்ப ஹரேஸ்வர சுவாமி கோயில் மகா கும்பாபிஷேக விழா நிகழ்ச்சிகள் 1-9-63 ஞாயிறு முதல் தொடங்குகின்றன. 6-9-63 வெள்ளிக் கிழமை காலை மணி 5-க்கு மேல் 6-53க்குள் மகா கும்பாபிஷேகம். காலை 8 மணிக்கு மகாபிஷேகமும், 9-30-க்கு லக்ஷார்ச்சனையும், இரவு பஞ்ச மூர்த்திகள் திருவீதியுலாவும் நடைபெறும்.

# இறைபணியாளர் மாற்றங்கள்

| பெயர் | இருந்த இடம் | மாற்றப்பட்ட இடம் |
|---|---|---|
| 1. திரு. டி. என். உமாபதிதேசிகர் | ஸ்ரீ வரசித்தி விநாயகர் கோயில் தொகுதி, வேலப்பாடி. | ஸ்ரீ சத்தியஞானசபை, வடலூர்த் தொகுதி |
| 2. ,, பி. குப்புசாமி முதலியார் | ஸ்ரீ சத்தியஞானசபை, வடலூர்த் தொகுதி. | ஸ்ரீ லக்ஷ்மிநாராயணப் பெருமாள் கோயில், ஸ்ரீ வில்லிபுத்தூர் |
| 3. ,, ஏ. என். பார்த்தசாரதி | ஸ்ரீ சாரநாதப் பெருமாள் கோயில், திருச்சேறை. | ஸ்ரீ நிவாசப் பெருமாள் கோயில், ஸ்ரீ நாச்சியார் கோயில் (முழு நேரப் பொறுப்பு.) |
| 4. ,, வி. குப்புராஜ் | ஸ்ரீ அகஸ்தீசுவர சுவாமி கோயில் தொகுதி, தாராபுரம். | ஸ்ரீ அரங்கநாத சுவாமி கோயில், காரமடை |
| 5. ,, ஜி. விஜயராகவன் | ஸ்ரீ அரங்கநாத சுவாமி கோயில், காரமடை. | ஸ்ரீ அகஸ்தீசுவர சுவாமி கோயில், தாராபுரம். |
| 6. ,, டி. இராமகிருஷ்ணன் | ஸ்ரீ கரி கிருஷ்ண பெருமாள் கோயில் தொகுதி திருவயற்பாடி | ஸ்ரீ நென்மலி ஆளவந்தார் அறக் கட்டளைகள் நென்மலி. |
| 7. ,, எம். கோவிந்தசாமி | ஸ்ரீ நென்மலி ஆளவந்தார் அறக்கட்டளைகள். நென்மலி | ஸ்ரீ கரிகிருஷ்ண பெருமாள் கோயில் தொகுதி திருவயற்பாடி. |

---

## எம்பெருமான் திருக்கருணை

அத்தா ! உன் அடியேனை அன்பால் ஆர்த்தாய்!
அருள்நோக்கில் தீர்த்தநீர் ஆட்டிக் கொண்டாய்!
எத்தனையும் அரியைநீ எளியை ஆனாய்!
எனை ஆண்டு கொண்டிரங்கி ஏன்று கொண்டாய்!
பித்தனேன், பேதையேன், பேயேன், நாயேன்
பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தா யன்றே!
இத்தனையும் எம்பரமோ? ஐய, ஐயோ!
எம்பெருமான் திருக்கருணை இருந்த வாறே!

—திருநாவுக்கரசர்

★ ★



திருவாமூரில் திருநாவுக்கரசு சுவாமிகள் கோயிலிற் கும்பாபிஷேகம் நிகழும் காட்சியும்,
அதனைக் கண்டு தரிசித்து மகிழும் மக்கள் திரளும்.





Edited and Published by the Commissioner, Hindu Religious and Charitable Endowments (Admn.) Dept. Madras-34. Printed at The United Printers, 3/27 Broadway, Madras-1.

